உ

கடவுள் துணை

சோதிடக்கிரகசிந்தாமணி யென்னும்

# வீமேசுரஉள்ளமுடையான்.

## மூலமும்-உரையும்.



இஃது.

திருமயிலைக்-குழந்தையானந்த சுவாமிகளது

சிஷியவர்க்கத்து ளொருவராகிய

பிட்சைபாக்கம்-கணிதநூற்புலவர்

## மார்க்கலிங்கஜோதிஷர்

அவர்களாற்பார்வையிட்டபிரதிக்கணங்க



திருவாரூர்

தியாகராயசுவாமிகளால்

பார்வையிடப்பட்டு



காஞ்சீபுரம்

## திருவேங்கடமுதலியாரது

இயற்றமிழ்விளக்க அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.



வெகுதான்ய ௵







கடவுள் துணை.

# பொருள் அட்டவணை.





உ

முருகக்கடவுள் துணை.

# சோதிடக்கிரகசிந்தாமணி

என்னும்.

# வீமேசுரஉள்ளமுடையான்

## மூலமும் - உரையும்.



பாயிரம்.

விநாயகமூர்த்தி-முருகக்கடவுள்-சரஸ்வதி

இவர்கள்வணக்கம்.

நேரிசைவெண்பா.

(க)ஐந்தாருவானதொடுக்காடர்மறைக்கோன்கிரகச்
சிந்தாமணிமாலைசெப்பவே—கொந்தார்
குழலுமையாடந்தக்குலக்குஞ்சரமுங்
கழலணிவேள்வாணியுமேகாப்பு.

(இ-ள்) பஞ்சதாருக்களாலும் சூழப்பெற்ற தொடுக்காடராகிய வீமேசுரர்பேரில் சோதிடக்கிரகசிந்தாமணி என்றொரு பாமாலைதொடுத்தற்கு வாசனைநிறைந்த அளகபாரத்தினையுடைய உமா மஹேஸ்வரியாள் பெற்ற மேலாகியவிநாயகமூர்த்தியும் வீரகண்டையைத் தரிக்கப்பெற்ற முருகக்கடவுளும் சரஸ்வதியும் காப்பாம்—எ-று. வீமேசுரர்க்குவேதமூர்த்தியென்னும் பெயர்ஆகவே மறைக்கோன் என்றனர், இஃது வழிபடுகடவுள் வணக்கம், (க)

வீமேசுரர்வணக்கம்.

எழுசீர்க்கழிநெடிலாசிரியச்சந்தவிருத்தம்.

(உ)கதிரவனுமதியுமங்காரகன்புந்தியுங்
கருணையுளசுரர்குரவனுங்
காரவன்காரியுமிராகுவுங்கேதுவுங்
கருதும்வெகுசுபமாகற்

பதினோராமிடமுவந்துச்சநிலையாய்நின்ற
பரிவினின்மகிழ்ந்தருள்செயப்
பங்கயன்செங்கண்மான்முதலானதேவரும்
பாரதிபரிந்துகாக்க
மதிநுதலிகுமரிசங்கரித்திரியம்பகிசூலி
மருமலர்ச்சடைமுடிமனை
யதிகபெலனுடையமுயலகன்முதுகுநெறநெறன
வாடியபதத்தழகனே
யடியவருளத்தமுதமேவீமநாதநின்
னருளளித்திடல்வேண்டுமே.

(இ-ள்) இரவிமதி அங்காரகன்-புதன்-குரு சுக்கிரன்-சனி-இராகு கேது ஆகிய நவக்கிரகங்களும், சுபாதிகமாய் சுபகாரமுற்றபதினோராமிடத்தில் உற்று-அத்துச்சமும்பெற்ற பலனில் மகிழ்ந்துஅருள்செய்யவும், அயனரிமுதலான தேவர்களும் சரசுவதியும் மனமகிழ்ந்துஇரட்சிக்கவும்பிறைபோலும், புருவங்களையுடைய கௌமாரி சங்கரி-திரியம்பகி திரிசூலி பருவதராசகுமாரி என்று யாவராலும் ஸ்தோத்தரிக்கப்பெற்றவழிவுடையம்மனும் கௌரியுமாகிய நகைமுக வல்லிசமேதனே கடுக்கைமாலையை அணிந்த ஜடாமுடியை உடையவனே அதிகமும்பெலனுள்ளமுயலகனதுமுதுகிலேநின்று திருநடம்புரிந்தநடேசனே அடியார்கள் உள்ளத்திலே பெருகின்ற தேவாமிர்தமே வீமேசுரமூர்த்தியே உனதுதிருவருள் கடாட்சிக்க வேண்டும்—எ-று. வீமேசுர மூர்த்தத்திற்கு அம்மன் நகைமுகவல்லியார், இஃது, ஏற்புடைக்கடவுள்வணக்கம் (௨)

நவக்கிரகாதியவணக்கம்.

கட்டளைக்கலிப்பா,

(௩) இரவிசங்கரனீசுரிதிங்கள்சே
இனியகந்தனிசைதிருமால்புதன்
குருவயன்சுரர்கோன்வெள்ளிசுன்னெமன்
குலவிராகுகுறிப்பத்திரகாளியா
மருவுசித்திராபுத்திரன்கேதுவாம்
வாவவர்முனிவோராசிமற்றுநா
ளரிமுதற்கிரகத்தாம்பரசிவ
னண்டபிண்டம்படைத்தளித்தாற்றுவே.

(இ-ள்) உருத்திரனே இரவியாகவும், உருத்திரியை மதியாகவும் குமாரக்கடவுளை அங்காரகனாகவும், திருமாலைப்புதனாகவும், பிரமதேவனைக்

குருவாகவும், இந்திரனைச்சுக்கிரனாகவும், எமனைச்சனியாகவும்,பத்திரகாளியைஇராகுவாகவும், சித்திராபுத்திரனைக்கேதுவாகவும்,தேவர்களையும்தேவரிஷிகளையும், இராசிநட்சத்திரம் முதலானவைகளாகவும் சிருஷ்டித்து இந்தஇரவிமுதலானகிரகங்களாலும்இராசிகளாலும்நட்சத்திரங்களாலும் அண்டபிண்டசராசரங்களையும்சிருஷ்டி ஸ்திதிசம்ஹாரம் செய்துவருகின்றனர் விமேசுரராகிய பரமசிவன்—எ-று. பரமசிவன் நவக்கிரகாதிகளைச்சிருஷ்டித்து அவரால் முத்தொழில்களைச் செய்து வருகின்றனர் என்றமையால் நவக்கிரகாதிகளைப் புகழ்ந்ததாயிற்று ஆகவே இஃதுநவக்கிரகாதியவணக்கம் என்பதுபெற்றாம். (௩)

அருளிறை வணக்கம்.

(௪) திருமடந்தையர்வாழ்தொடுக்காட்டில்வாழ்
செல்வர்விமேசுரரருளேசேரவே
யுரியநாள்ராசிகோட்பேர்சிகண்டிநன்
குற்றதாகுங்கணிதபஞ்சாங்கமு
மருணன்சோமன்குசன்புதனந்தண
னைந்தசங்கன்சனிராகுகேதுவுங்
கருதும்வட்டமுந்தூமம்வின்னுட்பமுங்
கணிதசாரநிலமுதற்காட்டுமே.

(இ-ள்) அஷ்டலட்சுமிகளும்வாசம்பண்ணுகின்றதொடுக்காட்டில் திருவீற்றிருக்கும்பெருஞ்செல்வத்தினையுடையவிமேசுரமூர்த்தியின்திருவருளானது தம்மைஇடைவிடாது தியானிக்கவேநட்சத்திரஉரிச்சொல்இராசிஉரிச்சொல்கிரகஉரிச்சொல்பஞ்சாங்ககணிதம் இரவியாதிநவக்கிரகங்களுடையனவும் பரிவேடாதிய உபயக்கிரகங்களுடையனவும்ஆகியகணிதசாரங்கள் இவைமுதலானசகலமும் அடியேனுடையஇருதயத்தில் இருந்து கரதலாமலகம்போல விளங்கச்செய்யும்—எ-று. (௪)

நூற்கதிகாரியை உணர்த்துகின்றது

(௫) கார்வழங்கியவையகின்
காட்சியானவக்கோட்களைப்பட்சியுஞ்
சாருமுச்சம்பகைநீசங்கேந்திர
தக்கராசிக்கொடைநோக்குதயமுஞ்
சேருமாரூடத்தாலும்முட்சிந்தனைத்
தேர்ந்துரைப்போனையன்செகத்தோர்க்கெலாங்
கூறுநல்லறிவாயவிமேசனிற்
கூடநின்பதப்பூவைக்கொடுக்கவே.

(இ-ள்) கருணைமழை பொழிகின்ற ஐயனே ஞானசொரூபியாகிய வீமேசுரமூர்த்தியே உன்னை அடைதற்பொருட்டு நீ அனுக்கிரகிக்கும்படி தாரகிக்கைத்மகிமையினுல் உனது சித்விலாசத்தால் உண்டாகும்காட்சியாகிய இரவியாதி நவக்கிரகங்களும் அவற்றின்நட்பாச்சியுச்சம்பகைநீசங்களும் கேந்திரதிரிகோணங்களும் இராசிகளும் கவிப்புநோக்குஆருடங்களும் ஆகியஇவற்றால் மானிடர்கள் தங்களுக்குள்நினைத்திருந்தசிந்தனையை இன்னதின்னதென்றெடுத்துரைக்கவல்ல சோதிடவானே இவ்வுலகத்தோர்க்குப்பிரமனுகச்சொல்லப்படும்—எ-று. (௫)

நூல்முதலியபொருள்.

(௬) கொடும்புடுத்தோலுடையவீமேசர்தாட்
கொண்டிராசிகற்கோளின்குணங்களால்
வடிவுபெண்ணணலியொற்றையொட்டையும்
வயதுகாதஞ்சுவையபிப்பிராயமு
மிடுமோர்தாதுவுமூலமுஞ்சீவனு
மிரவிசந்திரர்தந்தைதாய்மைந்தராய்
படுவர்பொன்வெள்ளிசெவ்வாய்புதன்சனிப்
பஞ்சபூதப்படலம்பகருவாம்.

(இ-ள்) தாருகாவனத்து முனிகள்பண்ணப்பட்ட கொடியயாகத்திலேஅதிககோபமும் பராக்கிரமு மாகவந்த புலியைஉரித்து அதன்தோலை ஆடையாகஅணிந்த வீமேசுரமூர்த்தியின் திருவடியைமுடிமேற்கொண்டுஇராசிகளின் இயல்களாலும்கோட்களின் இயல்களாலும் அண்டபிண்டசராசரங்கட்கும் உள்ளவடிவு,ஆண்மை,பெண்மை,அலி-ஒற்றை இரட்டை-வயது-காதம் சுவை-சிந்தனையின்பேதாபேதங்கள்-தாதுமூலசீவன்கள், இவைமுதலாயுள்ளசகலமும்தெரியுமாறு, இரவிதந்தையும் மதிதாயும், மற்றுள்ளகிரகங்கள்-ருடம், சந்ததிகளால், மேற்படிசந்ததிகளில்குருபிருதிவும், சுக்கிரன்அப்பும்-அங்காரகன் தேயுவும், புதன்வாயுவும், சனிஆகாசமுமாயுள்ளபஞ்சபூதப்படலமும் இந்நூலி னுட்சொல்லுவோம்—எ-று. (௬)

இதுவுமது.

(௭) வேயையென்றுயர்தோளிபாயனை
மிக்கமுத்துநகைமுகவல்லியார்
நாயகன்றொடுகாட்டர்தாளடியே
நயந்துபோற்றியநம்பர்க்களிக்கவே
தாயதேவப்பிரதிட்டைநன்மானிடஞ்
சுபமுகூர்த்தம்பொருத்தமுஞ்சேரபனம்

தோயுமாதர்திரட்சியுஞ்சாந்தியுஞ்
சொல்லுவாமற்றுமுள்ளசீமந்தமே.

(இ-ள்) மூங்கிலேவென்றஉயர்ந்ததோட்களேயுடையபராசத்தியாகி யநகைமுகவல்லியார் சமேதராகிய தொடுக்காட்டில் வாழும்வீமேசுரமூர்த்தின் திருவடிகளை நன்றாகஸ்துதித்துதேவர்களுக்குப்பிரதிஷ்டைமங்கைமீடர்களுக்கு விவாகம் பொருத்தம்சோபனம்ருது ருதுசாந்தி சீமந்தம்இவைகளெல்லாம் இந்நூலினுட்சொல்லுவோம்—எ-று (எ)

இதுவுமது.

(அ) மைந்தர்பேறுபுதல்வர்தரிசன
மன்னுசாதகம்யோகமகாதிசை
மைந்தர்சஷ்வர்க்குமட்டகவர்க்குமிர்
மருவுகாலசக்ரந்தறிக்காலுநீன்
மைந்தர்நாமகரணமூமன்னமூன்
வளருங்காதுகுத்தச்சவுளம்பண்ண
மைந்தர்வித்தையுபநயனம்பயிர்
வாங்கவீமேசுரரருண்மன்னுமே

(இ-ள்) மகப்பேறு புத்திரதரிசனம்ஜாதகம் யோகாயோகம்மகாதிசைஷட்வர்க்கு அஷ்டவர்க்கு காலசக்கரம் தறிக்கால் நாமகரணம்அன்னப்பிராசனம் காதுகுத்தல் சௌளம்பண்ணல் வித்தியாரம்பம்உபநயனம்தீட்சைவாங்கல் இவைகளெல்லாம் வீமேசுரமூர்த்தியின்திருவருளினால் இந்நூலினுட்சொல்லுவோம்—எ-று. (அ)

இதுவுமது.

(கூ) மன்னுமாடைசர்வாபரணங்ளுரு
மகிழ்ந்துபூணத்தயிலாபிடேகமு
மன்னவங்கிபரிகரிக்கவு
மரியசாந்திபவுடீகந்தீட்சையும்
பொன்னினன்முடிசூட்டத்தரிசனம்
பூமியையுழவித்திடத்தோப்பிடங்
செந்நெல்கொய்யநவபோசனஞ்செய்யத்
தேசிகன்வீமநாதராற்றேறுமே.

(இ-ள்) வஸ்திரம் ஆணிபூஷணம்பூண அபிஷேகம்பண்ண அக்கினிபரிகரிக்க சாந்திபண்ணபவுடீகம்பண்ண தீட்சைபெறமுடிசூட்டபூமியைத்தரிசிக்க பொன்னேர்பூட்டவித்திட தோப்புவைக்க கதிரறுக்க நவபோஜனம்பண்ண இவைகளெல்லாம்ஞானதேசிகராகியவீமேசுரமூர்

த்தியின் திருவருளினால்இந்நூலினுட்சொல்லுவோம்-எ-று. செந்நெல் செந்நெல் ஒனத்திரித்தது. (கூ)

இதுவுமது.

(௰) தேறுதானியம்வைத்திடவிந்திடச்
செய்யவுங்களுக்காமஞ்சுரிகைபோர்
கூறும்யாத்திரையாகுஞ்சகுனமுங்
குலவுமாறகமோடஞ்சல்லியங்குள
மூற்றுத்தநலந்தீதுசிந்தனை
யொளித்தளட்டமுறுந்தூது நலவுவா
வீறுமாடிமுழக்கஞ்சோதிமின்னல்
விரவுகெர்ப்பம்விமேசுரற்சாருமே

(இ-ள்) தானியம்வைக்க செலவிட உன்டிகளுவுரைத்தல்காமஞ்சுரிகைபடைத்திறம் யாத்திரை சகுனம் ஆற்றுவரவு அம்மலிவு மரக்கலம் வரவு பூமிசல்லியம் கீழ்நீர்ச்சல்லியம்குளம்வெட்டுதல் பொறுப்பேறு நலந்தீது நாட்டமுட்டிசிந்தனை தூதுலட்சணம் ஆடியுவாக்குறி மிருகசீரிஷமுதல்-தி-நாளிலும் சூரியன்நிற்கிறநாளில் மாரிதோற்றும்வகமுதல்-தி-நாளிலும் ஆவணிமுழக்கம் சோதிமுதல் - தி-நாளிலும்மின்னல் கெர்ப்போட்டம் இவைகளெல்லாம் விமேசுர மூர்த்தியின் திருவருளினால் இந்நூலினுட்சொல்லுவோம்—எ-று. (௰)

இதுவுமது.

(கக) சாரும்யோகஞ்சகடமுந்தக்கதாந்
தத்தயோகமமிர்தமரணமுஞ்
சேருஞ்சித்தயோகஞ்சுபயோகமுஞ்
செப்புநாசந்தினவாரயோகமும்
வாரசூனியமாதமரண்டந்தமு
டன்னுகண்ணுள்ளநாட்கள்குருட்டுநா
ணேருமேதிதிசாமவுணிங்கிவை
நிமலனூர்தோடுக்காடர்நிறைத்ததே

(இ-ள்) சகடயோகம் தத்தயோகம் அமிர்தயோகம்மரணயோகம் சித்தயோகம் சுபயோகம் நாசயோகம் தினவாரயோகம் வார சூனியம மாதாந்தம் வருஷாந்தம் கண்ணுள்ள நாள் கண்ணில்லாத நாள் திதி சாம உனன் இவர்கள் நிர்மலராகிய விமேசுர மூர்த்தி படைத்தன வாம் ஆகவே அவருடைய திருவருளினால் இவைகளெல்லாம் இந்நூலினுட் சொல்லுவோம்— எ-று. (கக)

இதுவுமது.

(கஉ) நிரைத்ததோர்கரணங்களுற்பாதமாய்
நெருக்கபாதம்விபரீதபாதமு
முரைத்தகோட்களுந்தக்கின்றநாட்களு
மோங்குநந்தைமுதன்மூவைந்தாந்திதி
தரித்தயோகினியங்கக்கிரகங்கள்
சரிதைகோசரம்வக்கிரதிசாரமும்
விரித்தகோள்வெற்றித்தோல்விமனைதுகில்
விரிதலெங்கள்விமேசர்விளக்குமே.

(இ-ள்) கரணங்கள் உற்பாதயாதம் - விபரீதபாதம் - உரைப்புநாள் - நந்தை முதலியதிதிகள்யோகினிஅங்கக்கிரகங்களின்சரிதைகள்கோசாரம்வக்கிரம் அதிசாரம் கிரகவெற்றித்தோல்வி மனையெடுத்தல்கோடிகிழில் இவைகளெல்லாம் இந்நூலினுட்சொல்லுமாறு விமேசுரமூர்த்தி தமது திருவருளினால் விளங்குச்செய்குவர். (கஉ)

இதுவுமது.

(கங) விளங்குமெண்பத்துநால்வகைச்சக்கரம்
விரும்புமாந்தர்திதிமந்திரச்சக்கரந்
தளங்கொள்சர்வதோபத்திரஞ்சக்கரஞ்
சந்திரகெர்ப்பமுங்கோட்டைகொள்ளசக்கரந்
துளங்கிலார்கூலமாகியசக்கரந்
துய்யகோசக்கரம்ரதச்சக்கரங்
களங்கொளும்பணிசக்கரங்கூர்சங்க்ர
கருதுங்கதொடுக்காடர்திருத்துமே.

(இ-ள்) எண்பத்துநான்குவகைச் சக்கரங்களுள் நரசக்கரம்திதிசக்கரம் மந்திரசக்கரம் சர்வதோபத்திரசக்கரம் சந்திரகெர்ப்பசக்கரம் அரணசக்கரம இலாங்கூலசக்கரம் கோமுகசக்கரம இரதசக்கரமபணிசக்கரம் கூர்மசக்கரம் இவைகளெல்லாம் இந்நூலினுட் சொல்லுமாறு தொடுக்காடராகிய விமேசுரமூர்த்தி திருவருட்கடாட்சிப்பர்—எ-று.()

பாயிரம் - முற்றிற்று.

---

## நூல்

### நட்சத்திரவுரிச்சொல்

அசுவனியின்பெயர்.

(கச) திருந்திமூர்த்திகளொருமாகிய
தேவனீசுரமூர்த்திமெய்த்தேசிகன்

பெருந்தவத்தருளத்தர்வீமேசர்தம்
பெருமைவாழ்த்திநாளின்பெயர்பேசுவாம்
பொருந்துமச்சுவினியயம்வாசிமா
புரவிகர்க்கிபரிதேசிகோடகஞ் •
தெரித்தசென்னியிவுளிகுதிரையுந்
தேர்ந்தவைஐப்பசிநாட்பெயர்செப்புமே.

(இ-ள்) பஞ்சகர்த்தாக்களும் பஞ்சகர்த்தாக்களுக்குஞானதேசிகனுமாய் அடியவருள்ளத்திலேவாசப் பண்ணுகின்ற வீமேசுரமூர்த்தியை ஸ்தோத்தரித்து நட்சத்திர உரிச்சொல் சொல்லுவோம் அயம் வாசிமா புரவி கர்க்கி பரி தேசி கோடகம் சென்னி இவுளி குதிரை ஐப்பசி இவை அசுவனியின்பெயராம்—எ-று. (க)

பரணி கிருத்திகை ரோகணி மிருகசீரிடம்,
இவற்றின்பெயர்.

(கரு)செப்புந்தாழிதாராசடுப்புப்பூதஞ்
செயகங்குலகிழவன்சோறுபரணியே
யப்பர்வீமேசர்மெய்யாரலங்கியே
யளகிருளழலாறுமீன்கார்த்திகை
• யொப்பில்பண்டிதேருருளையம்மீன்வைய
மோதுபாறுஞ்சகடுமுரோகணி
முப்பின்மான்றலைதேங்காயைந்தானமு
மூன்றுமீன்மிருகசிரமுமாப்பதே.

(இ-ள்) தாழிதாரசு அடுப்புபூதம் கங்குல்கிழவன்சோறு இவைபரணியின்பெயர், ஆரல்அங்கிஅளவுஇருள்அழல்அறுமீன் இவைவீமேசுரமூர்த்தியின் திருமேனியின்வடிவாகிய கிருத்திகையின்பெயர், பண்டி தேர்உருளைஐம்மீன் வையம் பாறு சகடு இவை உரோகணியின் பெயர் மான்றலை தேங்காய் ஐந்தானம் மும்மீன் இவை, மிருக சீரிடத்தின் பெயராம்—எ-று. (உ)

திருவாதிரை புனர்பூசம் பூசம் ஆயில்லியம் மகம் பூரம்
இவற்றின்பெயர்.

(கசு)உரைகொளாதிரைசெங்கையாழ்மார்கழி
யுண்கரும்புபுனர்பாலையாவணம்
புரைகொள்மூங்கில்புனர்பூசங்காற்குளம்
போதுதைகொடிறுகுருபூசமே
நிறைகொள்கவ்வைபணியாயில்கொடுநுக
நெருமலிமாசிவாய்க்கால்வேட்டுவன்மகம்

விரையிடைச்சனிதுர்க்கையுநாவிதன்
மிக்கபூரம்வியமேசர்தான்மெத்துமே.

(இ-ள்) செங்கையாழ்மார்கழி இவை திருவாதிரையின்பெயர்களும் புபுனர்தம்பாலேஆவணம் மூங்கில் இவை புனர்பூசத்தின்பெயர், காற்குளம்போது தைகொடிறு குருநாள் இவை பூசத்தின்பெயர், கௌவை பணிஇவை ஆயிலியத்தின்பெயர். கொடுநுகம்ஞெமலி மாசிவாய்க்கால் வேட்டுவன் இவைமகத்தின்பெயர், இடைச்சனி துர்க்கை நாவிதன்இவைபூரத்தின்பெயர்—எ-று. (௯)

உத்திரம்-அஸ்தம்-சித்திரை-சுவாதி-விசாகம்-அனுஷம்.

இவற்றின் பெயர்.

(கஎ)மெத்துபானீர்கடைச்சனிபங்குனி
மேவுமுத்திரமங்கையைம்மீன்கம்மீன்
னுத்தமன்களிறத்தநோய்ம்மீன்பய
றன்னுமம்பரஞ்செவ்விபோடாடையுஞ்
சித்திரைமரக்காற்றீபம்பதுமமே
தேர்ந்தசோதிவைகாசிமுற்றின்முற
மத்திசேரும்விசாகம்புற்றேள்பனை
யனுடம்வியமேசநாதரன்புற்றதே.

(இ-ள்) பாற்குளம் கடைச்சனிபங்குனி இவை உத்திரத்தின்பெயர், அங்கை ஐம்மீன் கைம்மீன் உத்தமன் களிறுஇவை அஸ்தத்தின்பெயர். நோய்ம்மீன்பயறுஅம்பரன்செவ்விஆடைஇவை சித்திரையின்பெயர். மரக்கால் தீபம் பதுமம் இவை சுவாதியின்பெயர், வைகாசிமுற்றில்முறம்இவை விசாகத்தின்பெயர், புல் தேள்பனைஇவை அனுஷத்தின்பெயர்—எ-று. (௭)

கேட்டை-மூலம்-பூராடம்-உத்திராடம்-திருவோணம்-அவிட்டம்.

இவற்றின் பெயர்.

(கஅ)உறுவல்லாரையொளிநாழிகேட்டைகொக்
குற்றதேட்கடையானியுமூலமே
செறிபொய்வாவியுடைத்தல்பூராடமே
செய்யகூவல்குளமாடியூர்மணி
பெறுசுருனமுடியுத்திராடமே
பெற்றல்சோணுலக்கைதிருவோணமே
பறவைகாக்கையுள்ளாவணிவிட்டமே
பன்பர்வியமேசுராருள்பன்னுமே.

(இ-ள்) வல்லாரை ஒளிநாழி இவைகேட்டையின்பெயர், கொக்கு தேட்கடை ஆவணிஇவைமூலத்தின்பெயர், பொய்வாவி உடை குளம்

ஊர்திமணி தாளம்முடி இவை உத்திராடத்தின்பெயர், சோணம் உலக்கைஇவை திருவோணத்தின்பெயர், பறவை காக்கைபுள ஆவணிஇவை அவிட்டத்தின்பெயர்—எ-று. (௫)

சதையம்-பூரட்டாதி-உத்திரட்டாதி இரேவதி-இவற்றின்பெயரும் நட்சத்திரப்பொதுப்பெயரும்.

(௬.)பன்னுசுண்டிலுஞ்செக்குஞ்சதயமே
பாறுஞாளிகொழுங்கோல்புரட்டையு
முன்னுமீதுபுரட்டாதிசீரறி
முரசுவேந்துத்திரட்டாதிதாலமே
மன்னுதோணிக்கடைமீன்மரக்கல
மருவுநாவாயிரேவதியேதின
மென்னும்வைகல்பொதுத்தாரகைக்கெலா
மெங்கள்வீமேசுரர்பதமெல்லையே.

(இ-ள்) சுண்டில் செக்குஇவை சதயத்தின்பெயர், ஞாளிகொழுங்கோல் புரட்டைஇவைபூரட்டாதியின்பெயர், சீர்அறிவன்முரசுவேந்தன்இவை உத்திராடத்தின்பெயர், தாலம்தோணி கடைமீன் மரக்கலம்நாவாய்இவை இரேவதியின்பெயர், தினம்வைகல் தாரகை இவை நாளின்பொதுப்பெயர். இவைகளெல்லாம் வீமேசுரர்திருவடியை எல்லையாக உதித்துத்தோன்றும்—எ-று. (௬)

நட்சத்திரஉரிச்சொல் - முற்றிற்று.



இராசிஉரிச்சொல்,

(௨ ௦)எல்லையில்லடிவார்வீமநாதர்தா
ளிறைஞ்சுமொத்தைமறிதகரேழக
மெல்லகொச்சைமைகாலியுமேடமே
விடைநற்பாண்டிலெருதுமேர்குண்டைசே
புல்லமேறிடபந்தாரந்தண்டியாழ்
போதுவீணைகவிஞன்மிதுனமே
நல்லகொண்டல்குளிரளிசேக்கைநீர்
நண்டுகாரலவனற்கடகமே.

(இ-ள்) மொத்தை மறிதகர் ஏழகம்மெல்ல கொச்சைமைகாலிஇவைமேஷத்தின்பெயர், விடை பாண்டில் எருதுகுண்டை சேபுல்லம் ஏறுஇது ரிஷபத்தின்பெயர், தாரம்தண்டியாழ் வீணைகவிஞன் இவை மிதுனத்தின்பெயர், கொண்டல் குளிர்அளி சேக்கைநீர்நண்டு கார்அலவன் இவை கர்க்கடகத்தின்பெயர்—எ-று. (௧)

சிம்பம்-கன்னி-துலாம்-விருட்சிகம்-இவற்றின்பெயர்.

(உ௧) நம்புவார்வீமேசநாரடியிணை
நாடுகான்மாமடங்கலரிபுலி
சிற்றில்கோண்மாகடுமீலச்சியமே
சிங்கமாதுதெரிவைபெண்சேடிகை
யுற்றகன்னிகோல்கட்டளைவாணிய
னுய்யதூக்கனிறைசெட்டியோன்றுலாக்
தேற்றபுன்றேண்மணிதுடர்விட்டநீ
டுய்யதுட்டன்றெறுக்கால்விருச்சிகம்

(இ-ள்) சர்வசிவன்களும் நம்புகின்ற வீமேசுரர் திருவடியையாமம் கான்மாமடங்கல் அரிபுலி சிற்றில்கோண்மா கடுவன் சீயம் இவைசிங்கத்தின்பெயர், மாது தெரிவை பெண்சேடிகை இவைகன்னியின்பெயர், கோல்கட்டளை வாணிபன் தூக்கல் நிறை செட்டி இவைதுலாத்தின்பெயர், தேள்மணி அவிட்டம் நீர் துட்டன் தெறுக்கால் இவைவிருட்சிகத்தின்பெயர்—எ-று. (உ)

தனுசு-மகரம்-கும்பம்-மீனம்-இவற்றின்பெயரும்
பொதுப்பெயரும்.

(உஉ) காலகாலன்வீமேசன்கனகவிற்
காண்டிகார்முகங்கைச்சிலைக்காண்டனுக்
கோலமான்றலைகேதுபுல்வாய்சுறா
கோதிலாமகரங்குடஞ்சாடிகூன்
சாலதாகுங்கலசமுஞ்சட்டுவஞ்
சாற்றுக்கும்பந்தருக்கியமீன்கயல்
சேலுங்கெண்டையுமீனத்தின்பேரெனச்
செய்யராசிபொதுவோரைசெப்புமே

(இ-ள்) காலகாலனாகியவீமேசுரர் கைச்சிலையாகியகாண்டிபங்கார்முகம்சிலை இவை தனுசின்பெயர், மான்றலை கேது புல்வாய்சுறா இவை மகரத்தின்பெயர். குடம்சாடிகூன்சால் கலசம் சட்டுவம் இவை கும்பத்தின்பெயர். மீன்கயல் சேல் கெண்டை இவை மீனத்தின்பெயர், இராசிக்கெல்லாம் பொதுப்பெயர்-ஓரை—எ-று. (௩)

இராசிஉரிச்சொல்-முற்றும்.



கிரகஉரிச்சொல்-இரவியின்பெயர்

(உ௩) செப்புமெங்கள்வீமேசர்கண்டிக்கெலாந்
தினகரன்பகல்வெய்யோன்றிவாகர

றைப்பில்பானுமருக்கன்மார்த்தாண்டனல்
லுதயனென்றாழிரவிபருதிகோ
ளப்பனாதவன்சூரியன்ஞாயிறோ
டருணமூர்த்தியரிபுண்டரீகமன்
முப்பில்வெங்கதிர்செங்கதிர்பார்க்கரன்
முதியனாதித்தனெங்கெங்குமூர்த்தியே
(இ-ள்) சர்வாத்மாக்களுக்கும் ஆதாரமான விமேசுரமூர்த்தியின்வ லக்கண்ணுள இரவியின்பெயர், திக்கதிரோன் தினகரன் பகலோன்வெய்யோன் திவாகரன்பானுமார்த்தாண்டன் அருக்கன் உதயன் என்றாம் இரவிபருதிகோளரசன் ஆதவன் சூரியன்ஞாயிறு அருணமூர்த்தி அரிபுண்டரீகன் வெங்கதிர்செங்கதிர்பார்க்கரன் முதியன்சகலலோகமூர்த்தி-எ-)
மதி-அங்காரகன்-இவர்கள்பெயர்
(உச) எங்களையர்விமேசர்கன்மூச்சசி
யிரவன்சோமன்மதிபிறையிந்துதி
டிங்கள்வெண்ணிலவம்புலிமீன்பதி
செய்யகோளரசாலவன்சந்திரன்
பொங்குசேய்குசனங்காரன்கனல்
பூமனவக்கிரன்போதக்குருதியே
யங்கியாரனிலமகனாழ
லானசெவ்வாயின்பேரென்றறிகவே
(இ-ள்) சசி இரவோன் சோமன் மதிபிறை இந்து திங்கள் வெண்ணிலா அம்புலி உடுபதி நாளரசன் அலவன் இவைஎனதுபிதாவாகிய விமேசுரர் திருச்சடையில்முடிக்கப்பட்ட மதியின்பெயராம், சேய்குசன் அங்காரகன் கனல் பூமன்வக்கிரன் குருதி அங்கிஆரல்நிலமகன் அழல் இவைஅங்காரகன்பெயர்—எ-று. (உ)
புதன் குரு-சுக்கிரன்-இவர்கள்பெயர்
(உரு) அறியுமன்பர்நெஞ்சானவிமேசர்நா
லாய்ந்தமால்புலவன்மேதைதூதவன்
பொறையன்புந்தியருணன்மதிமகன்
போதுசாமன்கணக்கன்புதன்பெய
ரிறைவனந்தணன்மந்திரிபொன்குரு
வெய்துபீதகன்சீவன்வியாழமே
செறியுஞ்சுங்கன்மறையவன்சுக்கிரன்
சிதன்பார்க்கவன்சீர்புகர்வெள்ளியே
(இ-ள்) அன்பர்கள்இருதயத்தோனாகியவிமேசுரர்திருவடியாகமங் கண ஆயும்படியானபுலவன்மால் மேதைதூதுவன் பொறையன் புந்தி

அருணன் மதிமகன்கணக்கன் இவை புதன்பெயர், இறைவன் அந்தண ன்மந்திரி பொன்குருபீதகன் சிவன் இவைகுருவின்பெயர், சுங்கன் ம ழைக்கோள் சுக்கிரன் சிதன் பார்க்கவன் புகர் இவை சுக்கிரன்பெயர், —எ-று. சிதன் சீதன் என எழுத்துத்திரிபாயிற்று. (௩)

சனி-இராகு-கேது-இவர்களின்பெயர்.

(உ௩) வெள்ளிமாமலைமீதுறைவித்தகன்
 விமேசுரர்வெளிவடிவேபெறும்
வள்ளல்சேய்முடவன்சுன்முதுமகன்
 மந்தன்காரிகரியவனீலனும்
தெள்ளுமெய்ச்சனியேயரன்பூண்பணி
 சேர்ந்தநாகமதிற்பாம்பிராகுவே
கொள்ளுஞ்செங்கோள்சிகியிவைகேதுவே
 கோட்களுமமெனப்பரிசித்ததே

(இ-ள்) ஸ்ரீகயிலாசவாசராகிய விமேசுரர்வெளிவடிவைப்பெற்றவு ரவிமகன் முடவன் சுன் முதுமகன் மந்தன்காரி கரியவன் நீலன்இவை சனியின்பெயர், விமேசுரர் அணியும்ஆபரணமாகியபாம்பின்பெயரெல் லாம் இராகுவின்பெயர், செங்கோள்சிகி இவைகேதுவின்பெயர்- எ-று

கிரகவுரிச்சொல்-முற்றிற்று.



பகல்நாழிகை அறியும்படி.

(உ௪) சித்திரைக்கைந்துமைந்தரையாறுமே
 சேவுக்கோராறுமாரரையாகுமே
கத்தும்யாழாறுமஞ்சரையஞ்சுமே
 கடகமைந்தைந்தரையாறியமே
மெத்துமாறுமாறரையாறுங்கன்னியே
 மேவுமாறைந்தரையைந்துகோலினி
லொத்தவைந்துடனலரைநாலுதே
 ஞன்னுநான்முன்றரைமூன்றரைப்பரோ

(இ-ள்) அளந்துகண்ட அடியுடனேகூட்டும்இலக்கம்சித்திரைமாத ம்முதற்பத்துநாளும்-௫-கூட்டவும், நடுபத்து-௫உ-கூட்டவும், கடைப்ப த்து-௬-கூட்டவும், வைகாசிக்குமுதற்பத்து-௬-நடுப்பத்து-௬உ-கடைப் பத்து-௬-கூட்டவும், ஆனிக்குமுதற்பத்து-௬-நடுப்பத்து-௫உ-கடைப்



பத்து-ரு-கூட்டவும்,ஆடிக்குமுதற்பத்து-ரு-நடுப்பத்து-ஙு கடைப்ப த்து-கூ-கூட்டவும். ஆவணிமுதற்பத்து-கூ-நடுப்பத்து-கூ௦-கடைப்பத் து-கூ-கூட்டவும்,புரட்டாசிக்குமுதற்பத்து-கூ-நடுப்பத்து-ரு-கடைப் பத்து-ரு-கூட்டவும், அற்பசிக்கு முதற்பத்து-ரு-நடுப்பத்து-சஉ-கடை ப்பத்து-ச-கூட்டவும், கார்த்திகைக்குமுதற்பத்து-ச-நடுப்பத்து-கூ௦-க டைப்பத்து-க-கூட்டவும், இந்தப்படி மாதங்கள்தோறும்முதற்பத்துந டுப்பத்து கடைப்பத்து இந்தவுடை வேறிலக்கங்களை அளந்தஅடியுட ன்கூட்டுவதென்றுளங்கோன் வீமேசநாதருரைத்தது—எ-று. (க)

இதுவுமது.

(உஅ) உரைத்தவின்மூன்றிரண்டரைரெண்டுமே
யுற்றமான்ரெண்டிரண்டரைமூன்றுமே
விரித்தகூன்மூன்றுமூன்றரைநாலுமே
மிக்கமீனுலுநாலரையைந்துமே
கருத்துமுதற்பத்திடைகண்டபத்துமுன்
கண்டபாதச்சாயையுடன்காண்பதா
மெருத்திலேறிவிளையாடுஞ்சங்கர
ரெந்தைவீமேசர்தாளையிறைஞ்சியே

(இ-ள்) மார்கழிமாதம்முதற்பத்து-க-நடுப்பத்து-உஅ-கடைப்பத் து-உ-தைமாதம்முதற்பத்து-உ-நடுப்பத்து-உஅ-கடைப்பத்து-ந-மாசி மாதம்முதற்பத்து-ந-நடுப்பத்து-ந௦-கடைப்பத்து-ச- பங்குனிமாத ம்முதற்பத்து-ச-நடுப்பத்து-சஉ-கடைப்பத்து-ரு-இப்படி சித்திரைமு தல்பங்குனியீறாக அந்தந்தமாதங்களுக்குமுதற்பத்துநடுப்பத்துகடை ப்பத்துஇவ்வடைவிற்சொன்னஇலக்கங்களை அளந்தஅடியுடனேஎந்தை யாகியவீமநாதரைப்போற்றிக்கூட்டுவது—எ-று. (உ)

இதுவுமது.

(உகூ) மேவுமாடிக்குநூற்றொருபத்துக்கீ
மிதுனங்கோளரிநூற்றொன்பதுக்குமீ
பாவையேறுநூற்றேழுக்கிகோன்மறி
பகருநூற்றஞ்சுக்கிமீன்விருச்சிகந்
தாவிநூற்றிரண்டுத்தனுமான்குடந்
தத்தநூற்றுக்கிசாயைமுப்பத்தையுஞ்
சேவிலேறும்வீமேசரைப்போற்றியே
சித்திரைமுதற்றிங்களீராறுமே

(இ-ள்) அளந்தஅடியுடனே அந்தந்த மாதங்களுக்குக்கூட்டும்இலக்கங்கள் கூட்டிக்கண்ட தொகைக்குஈயும் இலக்கம்-ஆடிமாதம்-௱௰-ஆனிக்கும் ஆவணிக்கும்-௱௪-புரட்டாசிக்கு-௱௭-அற்பசிக்கும்சித்திரைக்கும்-௱௫-பங்குனிக்குங் கார்த்திகைக்கும்-௱௨-மார்கழிதை மாசியிந்தமூன்றுமாதத்திற்கும்-௱-இந்தப்படிக்குக்கழிக்கவந்தஅளவு நழிகையாம்பூதச்சாயை மேற்கே நிற்கில் சென்றநாழிகை இத்தனையென்றும்கிழக்கேநிற்கில் இனிச்செல்லவேண்டியநாழிகை இத்தனையென்றும்சேவிலேறிய விமேசனைப் போற்றிச்சொல்வது—எ-று, (௯)

பகல்நாழிகை - முற்றிற்று.



## இரவுநாழிகைஅறியும்படி.

(௰)ஆறுமீன்முதலுள்குதிரைத்தலை
யமருமேகடகத்திருநாழிகை
கூறுமீன்மூன்றடுப்புப்பரணியேல்
கொண்டநாழிகைநாலேகாலாகுமே
வீறுகார்த்திகைமீன்பொதியேயனு
மிக்ககோளரிசிலொருநாழிகை
தேறுரோகணியுற்றுலீராறுமீன்
சிங்கமூன்றும்விமேசுரர்செப்புமே.

(இ-ள்) இரவுநாழிகைஅறியும்படி அசுவநி ஆறுநட்சத்திரம் குதிரைதலைபோன்றிருக்கும் இந்தஅசுவிநி உச்சமாகிற் கர்க்கடகத்தில்-௨-நாழிகைசெல்லும் பரணி அடுப்புக்கட்டி கூட்டினாற்போலிருக்கும் அந்தப்பரணி உச்சமாகில் கர்க்கடகத்தில்-௪௰-நாழிகை செல்லும், கார்த்திகைஆறுமீன் மீன்கோட்டையைப்போலிருக்கும்இந்தக்கார்த்திகைஉச்சமாகில்சிங்கத்தில்-௧-நாழிகை செல்லும்உரோகணி பன்னிரண்டு மீன் ஊற்றுல்போன்றிருக்கும் இந்தஉரோகணி உச்சமாகில் சிங்கத்தில்-௩-நாழிகைசெல்லுமென்றுஐயராகியவிமேசுரநாதர் அருளினது—எ-று.

இதுவுமது.

(௧௧ செப்புமான்றலைத்தேங்காய்முக்கண்ணாநாற்
சிங்கநாழிகையைந்தேகாலாகுமே
யொப்புமாதிரைபோர்மணிக்கன்னியி
லோங்குநாழிகையொன்றரையாகுமே
கப்பல்போன்றபுனர்பூசங்கோலினிற்
கருதுமீரைநாழிகைகாணுமே

யப்பர்வீமேசர்பூசம்புடலம்பூ
வாகுமென்பர்கோலையனாயாகுமே.

(இ-ள்) மிருகசீரிஷம் தேங்காய்க்கண்போலிருக்கு இந்த மிருகசீரிஷம் உச்சமாகில் சிங்கத்தில்-௫௰-நாழிகைசெல்லும் திருவாதிரைஒரு மணிபோன்றிருக்கும்இந்தத்திருவாதிரைஉச்சமாகில்கன்னியில்-௧௰- நாழிகை செல்லும் புனர்பூசம் கப்பல் போன்றிருக்கும் இந்தப் புனர்பூசமுச்சமாகில் துலாத்தில் ௭-நாழிகை செல்லும் பூசம் புடலம்பூப்போலிருக்கும் இந்தப்பூசம் உச்சமாகில் துலாத்தில்-௨௰-நாழிகை செல்லுமென்றுஐயராகிய வீமேசுரநாதர் திருவுளம்பற்றினர்—எ-று. (௨)

இதுவுமது.

(௧௨)ஐயர்பூரணையிலியநான்கம்மிபோ
லரியகோனன்குநாழிகையாகுமே
செய்யமாசிமுடறுகநான்குமீன்
றேளிலொன்றனாநாழிகைசெல்லுமே
யுய்யபூரமுமுத்திரக்கட்டில்போ
லுற்றதேன்மூன்றனாசிலைமேலனா
துய்யவத்தமொய்ம்மீன்சிலைமூன்றெனச்
சொல்லுமாடையிருகண்விலேந்தரே.

(இ-ள்) வீமேசர் பூரணமாகியஆயில்லியம்நான்குமீன் அம்மிபோலிருக்கும், இந்தஆயில்லியம் உச்சமாகில் துலாத்தில்-௪-நாழிகைசெல்லும் மகம்நான்குமீன் முடறுகம்போலிருக்கும், இந்தமகம் உச்சமாகில்விருட்சிகத்தில்-௧௰-நாழிகைசெல்லும், பூரமும் உத்திரமும்போற்கால்கட்டில்போன்றிருக்கும், இந்தபூரம் உச்சமாகில் விருச்சிகத்தில்-௧௩ நாழிகைசெல்லும்,உத்திரம்தனுசில்-௩-நாழிகைசெல்லும்,அஸ்தம்மொய்ம்மீன்போன்றிருக்கும், இந்தஅஸ்தம் உச்சமாகில் தனுசில்-௯- நாழிழிகைசெல்லும், சித்திரைஇரண்டுகண்கள்போன்றிருக்கும், இந்தச்சித்திரை உச்சமாகில் தனுசில்-௫-நாழிகைசெல்லும்—எ-று, (௩)

இதுவுமது.

(௧௩)தேறுசோதிவிளக்குமகரமே
தெளியவொன்றனாநாழிகையாமுற
மேறுகீர்வாயிடிந்ததுறவென
விலகுமேன்மகரத்தினுழிகை
வீறுந்தாலமீனுறுமுடப்பனை
விளங்குரும்பர்தனிலனாநாழிகை

கூறுகேட்டையும்மீட்டிபோலவே
குடத்திலொன்றரையெங்கோன்குறித்ததே

(இ-ள்) சுவாதிலருமீன் விளக்கு போன்றிருக்கும், இந்தச் சுவாதி உச்சமானால்மகரத்தில்-கஅ-நாழிகைசெல்லும், விசாகம்-இடிந்தபாழுந் தவுபோன்றிருக்கும், இந்தவிசாகம் உச்சமாகில் மகரத்தில்-௪-நாழிகை செல்லும், அநுஷம்முடப்பனை போன்றிருக்கும், இந்தஅநுஷம்உச்ச மானல் கும்பத்தில்-௩-நாழிகைசெல்லும், கேட்டைமூன்றுமீன் மீட்டி போன்றிருக்கும்; இந்தக்கேட்டை உச்சமானல் கும்பத்தில்-கஉ-நாழி கைசெலலும்என்று எங்கோன் வீமேசர்குறித்தது—எ-று. (௪)

இதுவுமது.

(௩௪) குறித்தமூலநான்மீன்காளமென்னவே
கும்பந்தன்னிற்கொளுநான்குநாழிகை
செறித்தபூராடமாடிநீள்கட்டில்போற்
செய்யமீனென்றரைநான்குநாழிகை
யுறுத்தவோண்மூன்றுமுழக்கோலென
வுற்றமேடத்துமூன்றுநாழிகை
யறுத்தசக்கரமாறுமீனுவன
வன்னல்வாகனமேறரைசெல்லுமே

(இ-ள்) மூலம்நாலுமீன் எக்காளம்போன்றிருக்கும், இந்தமூலம் உச்சமாகில்கும்பத்தில்-௪-நாழிகைசெல்லும் பூராடமும்உத்திராடமும் நீண்டகட்டில்போன்றிருக்கும், இதுகள் உச்சமாகில் முறையே மீனத் தில்-கஉ-நாழிகையும்-௪-நாழிகையும்செல்லும், திருவோணம்உழக்கோ ல்போன்றிருக்கும் இது வுச்சமாகில் மேஷத்தில்-௩-நாழிகைசெல்லும், அவிட்டம்-சக்கரம்போன்றிருக்கும், இதுஉச்சமாகில் ரிஷபத்தில்-உ நாழிகைசெல்லும்—எ-று. (௫)

இதுவுமது.

(௩௫) செல்லுமேதவிடென்னச்சதயமுந்
தேசிகன்விடைரெண்டரைநாழிகை
வெல்லுமேபூரட்டாதியும்வேந்தனு
மிக்ககட்டில்யாழொன்றரைநாலதே
நல்லரேவதியாறுமீன்பாடக
நயக்குமேகடகத்தொருநாழிகை
வில்வமாலையணிந்தவீமேசர்தாள்
விளங்கிராநாழிகைகள்விரும்புமே

(இ-ள்) சதயம்தவிட்டுமீன்போன்றிருக்கும்இது உச்சமாகில்ரிஷபத்திலே ௨௫-நாழிகைசெல்லும், பூரட்டாதியும் உத்திரட்டாதியும்நீண்டகட்டிற்கால் போன்றிருக்கும், பூரட்டாதி உச்சமாகில் மிதுனத்தில் ௩௫-நாழிகை செல்லும்; உத்திரட்டாதி உச்சமாகில் மிதுனத்தில்-௪-நாழிகைசெல்லும், இரேவதி உச்சமாகில் கர்க்கடகத்தில்-௧-நாழிகைசெல்லும், என்றுவில்வமாலையணிந்தவிமேசுரர்பாதத்தைநாடி இரவுநாழிகை சொல்லுவர்—எ-று. (௬)

இரவுமதி.

(௧௬) விரும்புகேட்டைமுன்னொன்பதிடக்கணே
மிக்கதோணிமுன்றும்வலக்கணே
நிரம்புமாதிரைமுன்பனிரெண்டுமே
நெத்திநேராகுமுச்சத்தெட்டாகுநாள்
வருமன்முதற்பானுமட்டெண்ணியே
மன்னிரெட்டிப்பதுவருநாழிகை
பெரும்பொருடொக்காடர்தாள்போற்றியே
பேசுவாரிராநாழிகைப்பேறிதே

(இ-ள்) கேட்டைநட்சத்திரமுதல்-௯- நட்சத்திரம் இடக்கண்பார்வையிலுச்சமாம் அதிகவுச்சமென்றறிக இரேவதிமுதல்-௩-நட்சத்திரமும்வலக்கண்பார்வையிலுச்சமாம், இவைஉச்சத்தில் உச்சமாமென்றறிக, திருவாதிரைமுதல்-௰௨-நட்சத்திரமும் நெத்திநேராக வுச்சமென்றறிக, இன்னமொரு அடைவுயாதொருநட்சத்திரம்உச்சமாவதோ அந்தநட்சத்திரத்திற்கு-௮-ஆம் நட்சத்திரம்உதயமென்றறிந்து உதையமானநட்சத்திரமுதல் அப்போதுஇரவிஇருக்கிற நட்சத்திரமட்டும் எண்ணிக்கண்டதுகையை இரட்டித்துஇரட்டித்ததொகையை செல்லவேண்டினநாழிகையென்றுசொல்வது—எ-று. (௭)

இராசிநாழிகை அறியும்படி.

(௧௭) பேறுமீனும்நாலேகாலாகுமே
பெரியசால்விடைநாலேமுக்காலதாம்
வீறுதல்டரிதேன்சுறவோரைகள்
மிக்கநாழிகையைந்தேகாலாகுமே
தேறுகன்னிகோலும்மைந்துநாழிகை
சிலையுங்கொண்டலுமைந்தரைநாழிகை
மாறிலாதசிவன்றெம்பக்காடர்தாள்
வணங்கராசியுதயமுரைக்கூறுமே

(இ-ள்) மீனம்மேஷம்-௪௰-நாழிகை, கும்பம் ரிஷபம்-நாலேமுக்கால்நாழிகை, மிதுனம்சிங்கம்விருச்சிகம்-௫௰-நாழிகை, கன்னிதுலாம்

௬-நாழிகை, தனுசு கர்க்கடகம்-௫௰-நாழிகை, இப்படி மேஷமுதல் மீனமீறாக-௰௨-இராசியும்இராப்பகல்-௬௰-நாழிகையும், சித்திரைமுதல்பங்குனியீறாக அந்தந்தமாதத்திற்குச்சொன்ன இராசிகளின் நாழிகை உதயமுதல்-௨-இராசியும் அடைவே நாழிகை-௰-ம்-அறும், அந்தந்த மாதங்களிலேசென்ற நாளைக்கு நாழிகைகளும் அடைவு அந்தமாதம் உதயராசிநாழிகை இரட்டித்துஇரட்டித்தொகையை மாதத்திற்சென்ற நாளிலே பெருக்கிக்கண்டதொகை விநாடியாம் அந்தவிநாடி-௬௰ கொண்டது ஒருநாழிகைவிழுக்காடு நின்றநாழிகைஉதயமுதல்-எ-று. (௮)

யுகவருடம் அறியும்படி

(௫௮) கூறுவேன்ஸ்ரீமேசர்தாள்சென்னிதேற்
கொண்டுசுவாசமிருபத்தோராயிரத்
தாறுநூறுகிரேதாயுகமெல்பதி
னாற்பெருக்கத்திரேதமறுபதா
லேறுநாற்பதிலேற்றத்துவாபர
மிருபதாலேபெருக்ககலியுக
மீறிச்சென்றதுமூவாயிரத்தொரு
நூறுமேற்பத்துமொன்பதாய்மேவுமே.

(இ-ள்) ஸ்ரீமேசுரர் திருவடியைசென்னிமேல்வைத்துக்கொண்டுசுத்தகணித பஞ்சாங்கம் பிறக்கும்படி அண்டநாயகனுக்குச்சரம் இரவிமுதலான கிரகங்கள் இராசி நட்சத்திரங்கள்ஒரு சுவாசமாக விடுகிறது பகல்-௩௰-நாழிகையாம் உள்ளே வாங்குகிற சுவாசம், இராத்திரி-௩௰ நாழிகையாம் இவை-௬௰-நாழிகையாம். அண்டநாயகனுக்கு ஒரு சுவாசமென்றறிக. இந்த ஒரு சுவாசம் பூலோகநாயகனுக்கு ஒருதினமென்றறிக. இப்படி அண்டநாயகனுக்கு-௨௧௲௬௱-சுவாசமும்ஒருதினமென்றறிக. இந்த அண்டநாயகனிட சுவாசமே தேவர்களும், கிரகங்களும், ரிஷி முனீசுரரும், மற்றுமுள்ளவைகளெல்லாம் இப்படி நடக்குமென்றறிக-இந்த அண்டநாயகனிடசுவாசம் ஒன்று பூலோகநாயகனுக்கு-௨௧௲௬௱-சுவாசமாய் நடக்கும் இந்த-௨௧௲௬௱யும்-௮௰-தில்-பெருக்க, ௧௭-லட்சத்து-௨௮௲-வருஷம் கிரேதாயுகமென்றறிக, இனி திரேதாயுகம் ௬௰-ல்-பெருக்க-௧௨-லட்சத்து-௯௬௲-வருஷமென்றறிக, இனி துவாபரயுகம்-௪௰-ல்-பெருக்க-௮-லட்சத்து-௬௪௲ வருஷமென்றறிக, இனி கலியுகம்-௨௰-ல் பெருக்க-௪-லட்சத்து-௩௨௲ வருஷமென்றறிக, இப்போது கலியுகத்தில் சாலிவாகனன்-ஆண்டதற்கு முன்சென்றது-௩௧௭௯-வருஷமாம்—எ-று. (௯)

உய ஸ்ரீமேசர்உள்ளமுடையான்

கலியுகவருடஞ் சென்றதறியும்படி.

(கக) மேவுமேசாலிவாகனன்றோன்றிய
மிக்கவாண்டுமூந்நூறமேலேழுமே
தாவுவட்டமிருபதறுபதாந்
றக்கவாயிரமேலிருநூறதாம்
பாவுகாலாயிரத்தெழுநூற்றிரு
பத்தொடெட்டாண்டுசென்றகலியுகந்
தேவர்கோன்ஸ்ரீமானார்பஞ்சாங்கமாய்ச்
செப்புமிப்பிரபமுனைவட்டமாகுமே.

(இ-ள்) சாலிவாகனன் ஆண்டவருஷம் கசகூ இதற்கு வாக்கியத்தைசேர் மீன் இதற்குமேல் சுய சென்றது ஒருவட்டமாய் அப்படி நாளது சென்றவட்டம்-உய-சென்றது இந்த இருபதையும்-கூ ர்-ல்-பெருக்கது உா-வருஷம்சென்றதென்றறிந்து இதற்குமுன்சாலிவாகனன்தோன்றியவருஷமும் அதற்குமுன் கலியுகவாக்கியமும் வைப்பேன்கண்மீன் என்கிறதை அத்துடன்கூட்டிக் கலியுகஞ்சென்றதுவட்டம் இருபதறுதியாய்-சஎஉ அ-வருஷமென்றறிக. இதற்கு வாக்கியம் வேலாவென்றீரோ, இந்தவாக்கியத்துக்குமேல் தேவர்கோன் தொடுக்காடுடைய ஸ்ரீமானார்பஞ்சாங்கமாய் பவ(வரு) முதல் நாளது சென்றதுகலியுகவாக்கியத்துடன் கூட்டிக் கலியுகஞ்சென்றது பிறக்கும்—எ-று. (ய)

சுத்ததினம் எடுக்கும்படி.

(சய) வட்டஞ்சுத்தவாரமெடுக்கும் வகை
மருவுகலியுகவாக்கியமேற்றிசை
யிட்டதானத்தின்கீழ்ச்செவ்வைமுன்னமே
மூலங்குமைந்துநாலொன்பதேழ்நான்குநால்
கட்டுமொன்பதுமூன்றுசுன்வாக்கியங்
கலியுகத்திசைதானமுன்னேகமா
மட்டுமேற்றித்திசைதானமேறிடும்
வள்ளார்ஸ்ரீமேசர்தாளைவருந்தியே.

(இ-ள்) இனிசுத்ததினமெடுக்கும்படிகலியுகம் பிறந்ததைமேலே வைத்து இந்தகலியுகவாக்கியமேலே தசஸ்தானத்துக்கு ஏகஸ்தானமளவாய்ப்பெருக்கவும்பெருக்கின பிறகுபத்துக்கொன்று ஏகஸ்தானத்திலிருந்துதசஸ்தானத்திலே பத்துக்கொன்று ஏறிட்டுவரவுமென்றஇந்தவள்ளலாகியதொடுக்காடுடைய ஸ்ரீமேசர்தாளைவருந்திச்சொல்வது—எ-று.

இதுவுமது.

(சக) வருந்தியேயதின்கீழ்நடுத்தானமே
வாக்கியநான்குறுந்தானஞ்சுன்னெட்டுப்பின்
பொருந்துதன்னொருதானமப்பின்னொன்றுவை
போந்தரித்ததுமெனடுப்பத்திவை
யிருந்துசேடமறுபத்துநான்குபேர்க்
கிந்தவப்பலனுழிகையாமதில்
பிரிந்தசேடமறுபதாலேற்றியே
பெற்றசேடம்விநாடியுந்தற்பரை.

(இ-ள்) பத்துக்கொன்று தசஸ்தானத்தில் ஏறிட்டபிறகு அதின்கீழ்நடுஸ்தானத்தின்முதலாய் பொன்பொன்னேமேலோகம் என்கிறவாக்கியத்தை வைத்தரிக்கவும் அரித்துக் கண்ட பலத்தை நடுஸ்தானத்தின்மேலே உயரவைத்திட்டுவரவும் அரித்தபிறது பொதாவொன்கிறவாக்கியத்தை வைத்தரித்து அரித்தசேடத்தை-௬-ற்பெருக்கவும்பெருக்கினதைக்கண்ட நாழிகைக்கரிக்க நாழிகையாய் மீந்தசேடத்தைப் போதாவொன்கிறஅறுபதினாலேபெருக்கியரிக்கஅரித்தபலன்தற்பரையாம்-எ-று.

இதுவுமது

(சஉ) பரமதேசிகர்ஸ்ரீமேசர்பாதமே
பணிந்தசுத்ததினத்திற்கீழ்த்தற்பரை
வருவிநாடிகைநாழிகைவைத்ததில்
வாங்குதற்பரைநாற்பத்தேழ்நாடியிற்
பிரியுநாலெட்டுமைந்துவிநாடியிற்
பிரித்தவாரமிரண்டொழிசுத்தநாள்
கருதுமேழிற்கழிக்கின்றவாரமே
காக்குமான்மிடிலம்மாதத்துருவமே.

(இ-ள்) பரமகுருவாகிய ஸ்ரீமேசர்பாதமே சரணகப்பணிந்தெழுகின்ற முன்கண்ட சுத்ததினத்தையும்வைத்து அதன்கீழ்தற்பரைவிநாடிகை நாழிகை அடைவாய்வைத்து அதின்பேரிலே தற்பரைவிநாடிநாழிகைவாரமுதலாய்எடுக்கும் வாக்கியம்பெற்றீர் பாரில்முன்னுள்ளவனோர் என்கிறவாக்கியமெடுத்துப்போட்டு நின்றசேஷம் சுத்ததின்மென்றறிக இந்த சுத்ததினத்தை-எ-ற்கழித்து மீந்ததுவாரமும் கீழிருப்பது தற்பரைவிநாடிகை நாழிகையும் வருஷப்பிறப்பாமென்றறிக அதுவே மேஷமாதவாக்கியத்துருவமென்றறிக சுத்ததினம் இப்படி—எ-று. (௰௩)

அற்றைப்பஞ்சாங்க வாக்கியம்.

(௪௩) தூரியவேந்தர்வீமேசுரர்சொற்படி
தோற்றுமேபற்றைவாக்கியங்காண்பது
மருவுசுத்ததினத்தின்கீழ்கற்பனர்
வளர்விநாடிகைநாழிகைவாரமவை
வருடமாதத்துருவத்திற்கூத்தினம்
வைத்துக்கூட்டியசுத்ததினந்தனி
லரியவந்தாறுவைந்தைந்துமூன்றுமே
யாறுமொன்றுமடைவேயெடுப்பதே.

(இ-ள்) தூரியவேந்தராகிய வீமேசுரர்சொற்படி அற்றைப்பஞ்சாங்கவாக்கியங்காணும்படி சுத்ததினங் கண்டவாக்கியத்தை வைத்துக்கீழே மாதவாக்கியத் துருவத்துக்குக் கண்டவாக்கிய விநாடிநாழிகையும் வைத்து அதன்பேரில்சென்றநாளைக்கு மாதத்துருவவாக்கியத் துருவத்தையுங்கூட்டி கத்தினமுங்கூட்டி விநாடிநாழிகை வாரமடைவாயேறிடவும்ஏறிட்டபிறகு சுத்ததினத்தை முன்னூல்குருவின முர்தமென்கிறவாக்கியத்தாலே உடுத்துப்போடவும்—எ-று. (௰௪)

இதுவுமது.

(௪௪) எடுத்தமீதிற்றசத்தானக்கீழ்
விசையவொன்பதேழாலடுபின்மூன்றுவைத்
தடுத்தரித்தபலனே மேலாகவைத்
தரித்தசேடத்தின்கீழ்வைக்கும்வாக்கியந்
தொடுத்ததாட்டுநாலாலடுவைத்தேகழித்
துலங்குமம்பலின்மேல்வைத்துச்சேடமே
நடித்திடும்மற்றைவாக்கியமாகுமே
நவின்றதெங்கடொடுக்காட்டினுதரோ

(இ-ள்) முன்னெடுத்துப்போட்டு மீந்த சுத்ததினத்தின் கீழேதசஸ்தானமுதலாய்-கை-மெய்-காணில் என்கிற வாக்கியம்வைத்தரிக்கவும் அரித்தபலத்தை வேறே உயரவைக்கவும்திரும்பவுமந்த வாக்கியத்தைத்தள்ளிப்போட்டுத் தேடீர்பாலென்கிற வாக்கியத்தைவைத்து அரிக்கவும் அரித்தபலத்தை வேறேவைக்கவும் நின்றசேடம் அற்றை வாக்கியமென்றுளங்கள்தொடுக்கடராகியவீமேசுரர்திருவுளம்பற்றினதாம்எ-று.

இதுவுமது.

(௪௫) நாதராந்தொடுக்காடரைப்போற்றிய
நயந்துவாக்கியத்துருவமெடுப்பதா

மோதுமுப்பதொருகலைபாகமே
யுற்றமுனைவந்திராசியோரைந்துமே
யாதிமுன்னமெடுக்குமவ்வாக்கிய
மரித்தவப்பலனுமேல்பெருக்கிய
சோதித்தேறிட்டுவைத்திரண்டாந்தரந்
தொடுத்தரித்தபலன்வகைசொல்லுவாம்

(இ-ள்) நாதராகிய தொடுக்காடரைப் போற்றிசெய்து வாக்கியத்துருவம் எடுக்கும்வகைகளின் முன்தருமமென்கிறவாக்கியத்தைமுன்னே வாக்கியமெடுக்கும்போது முந்தவரித்தரித்தவாக்கியப்பலனை இந்தவாக்கியத்தசன்தானமுதலாய்வைத்துப்பெருக்கவும் பெருக்கிக்கண்டகலைபாகராசியடையவே ஏறிட்டுவேறேவைத்துமுன்னேவாக்கியமெடுக்கும்போது இரண்டாந்தரம் பலனெடுத்துரைக்கும்வகைசொல்வோம்—எ-று. ()

இதுவுமது.

(சசு) சொல்லுவார்தொடுக்காடர்விகலையேழ்
துடர்ந்துநாற்பத்துநாற்கலைபாகமே
சொல்லுமேஇருபத்தேழதனைமுன்
னுய்யவப்பலனுமேல்பெருக்கியே
வல்லவர்முன்னரித்துமேல்வைத்தது
மறுத்திரண்டாந்தரமாயரித்தது
நல்லதொன்றுகலைநாற்பத்தொன்றதை
நாடுபாகம்பன்மூன்றதைமூன்றதே

(இ-ள்) பஞ்சாங்கத்துருவம் எடுக்குமடைவுசொல்வார் தொடுக்காடராகிய விமேசுரர்வேறேபேர்விமேசன்தான்என்கிற வாக்கியத்தையே வைத்துமுன்னேவாக்கியமெடுக்கிறபோது இரண்டாந்தரம் வாக்கியமெடுக்கிறபலனைக் கொண்டு இந்தவாக்கியத்தைப் பெருக்கவும் பெருக்கினதை விகலைகலைபாகராசியடையவே ஏறிட்டு முந்தப்பெருக்கினவாக்கியத்தையும் இரண்டாந்தரம் பெருக்கினவாக்கியத்தையும் இவ்விரண்டையுங்கூட்டி இதன்பேரிலேயேறி பன்னீர் மிகமிக்கோர் என்கிறவாக்கியத்தைக்கூட்டவும்—எ-று. (சஎ)

வாக்கியத் துருவம்.

(சஎ) தேறுமித்தொகையொன்றாகக்கூட்டியே
தெரிந்துகாணத்துருவவாக்கியமிது
கூறுமிராசியீரறுந்தேசாந்தரங்
குலவுசித்திரைமின்னெட்டுமொன்றதன்

வேறுமெட்டளவுங்கலைரெண்டுதண்
மிக்கப்பின்னெட்டுநாற்கலைதள்ளுமே
வீறுவாரமெட்டுங்கலையாறுதள்
வீமநாதர்திருவடிமெத்தமே.

(இ-ள்) முன்கூட்டின கலைபாகராசியை அடைவேஏறிடவும்ஏறிட்டபிறகு கண்டது துருவவாக்கியமென்றறியவும் இனிச்சித்திரைமாதமுதல்பங்குனியளவும் தேசாந்தரமறியும்படி அன்றுடகன்சொல்லுமவாக்கியமுந் துருவமுங்கூட்டிக்கலைபாகராசியாக ஏறிட்டு ஏறிட்டபிறகுதேசாந்தரகலை சித்திரைமாதத்துக்கு நாளெட்டளவுங்கலைஒன்றுதள்ளவும் எட்டுக்குமேல் பதினறளவும் இரண்டுகலைதள்ளவும் இதற்குவாக்கியம் வெளிவினை மறைவேலென்றறிக இப்படிதேசாந்தரக்கலை கழிப்பதென்று வீமநாதர் திருவடியைச்சிந்திப்பது — எ-று. (௩௮)

இதுவுமது.

(௪௮) வெத்தும்வைகாசிக்கேழெட்டொட்டுமே
மேவுமீராறியாழ்பனிரண்டதா
மொத்தபனிரண்டுபன்னென்கீராறதா
முன்னுமாடிமுன்பன்னென்கீரேழுதள்
சித்துப்ன்மூன்றுபன் மூன்றுசிங்கமுன்
றேறுமுன்னன்குபன்னென்றுமென்பதே
யத்தவாறைந்துமூன்ரென்றுகன்னிமட்
டாய்க்கவீமநாதாருளினுல்

(இ-ள்) வைகாசிக்குத்தேசாந்தரகலை-எ-அ-அ-கஉ-இதற்குவாக்கியம்ரிஷிவசுவசுகதிர், ஆனிக்குதேசாந்தரகலை-கஉ-கஉ-கச-கஉ-இதற்குவாக்கியம் ஒளிகதிர்மகலான்மனுவிந்திரனே ஆடிக்குதேசாந்தரகலை-கசு-கசு-கங-கங-இதற்குவாக்கியம் மிக்க நலமனு மனிவிசுவம் விசுவம்-இனி ஆணிக்குத்தேசாந்தரகலை-கஉ-கக-கூ-அ-இதற்குவாக்கியம்லக்கினம்ருத்திரன் தாறுகொள்பாலாஇனி புரட்டாசிக்குத் தேசாந்தரகலை-கூ-ரு-ங-க-இதற்குவாக்கியம் கந்தன் மந்திரங்கனல்மதிகலைகள் இந்தேசாந்தரகலைகள் புரட்டாசியளவுங்கழிக்கவும்வீமநாதாருளினுல் — எ-று.

இதுவுமது.

(௪௯) அரியகோலொன்றுமூன்றுநாலாகக்கூட்
டாகுந்தேளெட்டைந்துபன்னென்றீரா
றுருவிலப்பதின்மூன்றுமூன்றுறிரள்
டுற்றடன்மூன்றுதயமீராறிரண்

டொருபன்மூன்றுபன்மூன்றுசாலான்பின்
னொன்றுமொன்பதுமொன்றுசெலாறுடைந்
துரியமூன்றொன்றுகோலாதிகூட்டுமே
புளத்திலெங்கள்விமேசனையுன்னியே

(இ-ள்,) அற்பசிக்குத்தேசாந்தரகலை-௧-௩-௪-௯-இதற்குவாக்கியம் சந்திரன் வன்னி சதுமுகன் சமயம் இனிகார்த்திகைக்குத் தேசாந்தரகலை-அ-௰-௧௩-௧௨-இதற்குவாக்கியம் வசுலவதாரம்ருத்திரன் வான்கதிரினிமார்கழிக்குத் தேசாந்தரகலை-௧௩-௩-௧௨-௧௩-இதற்குவாக்கியம்விசுவம்புவனம் வேந்தன் விசுவம் தைக்குத்தேசாந்தரகலை-௧௨-௧௨-௧௧-இதற்குவாக்கியம் விண்கொள் வின்னோர் விசுவம்விசுவம், மாசிக்குத்தேசாந்தரகலை-௨-௧௧-௯-௧-இதற்குவாக்கியம்கன்காணருத்திரன் மணிதெசக்கானும் பங்குனிக்குத் தேசாந்தரகலை-௯-௫-௩-௧-இதற்குவாக்கியம்சுவை பொறிகனல்மதி துலைகூட்டு அற்பசிமுதல் பங்குனியளவும்பஞ்சாங்ககலையினுடனே இந்ததேசாந்தரகலைகளைக்கூட்டுவது எங்கள்விமேசுரனைத்தியானித்து—எ-று. (உ௰)

யோக்கியாதிகலை.

உன்னுமேடாதியோக்கியாதிக்குப்பன்
னொன்றுபன்னொன்கிரெட்டிப்பன்னேழுசே
யென்னும்பத்தொன்பதுவுமிருபத்தொன்
றிருபத்தோடிரண்டாயிருபத்துநான்
கின்னமானிமூவெட்டிருபத்தோடைந்
தெய்துமையைந்திருபத்துநால்குளி
ரன்னநாலாரிருபத்துமூன்றுமே
யைந்துநாலிரண்டிருபத்திரண்டதே

(இ-ள்,) யோக்கியாதி சித்திரைமீ முதல் அற்பசிமீ ட்டளவும் கூட்டுவது சித்திரைக்குமுன்வணட்டுநாளளவுங்கலை-௧௧-இதுகூட-௧௯-நாளளவுங்கலை-௧௩-இதுவும் இருபத்திரண்டுநாளளவும் கலை-௧௯-இருபத்திரண்டுமேல் சித்திரைமீ வரைக்குங்கலை-௧௭-இந்தப்படி முன்சென்றநாளைக்கு சென்றநாட் கலையுங்கூட்ட இன்னதென்று அன்றையில் வாக்கியத்துருவங்கூடின கலையில்கூட்டவும் இதற்குவாக்கியம் வள்ளல் சிதம்பூணச்செல்வம் வைகாசிக்குக்கலை,௯-௨௧-௨௨-௨௪-இந்தக்கலைகளைச்சென்றநாளைக்குக் கணக்குப்பார்த்துக்கூட்டவும், இதற்குவாக்கியம் ஐயன்கண்டாய் ஆனல் சீவா ஆனிக்குக்கலை-௨௪-௨௫-௨௬-௨௪-இந்தக்கலைகளைக்கணக்குப்பார்த்துக் கூட்டவும் இதற்கு வாக்கியம்சீமான்

முன்னாள் குன்றுவிட்டார் ஆடிக்குக்கலை-உச-உரு-உஉ-உஉ-இந்தக்கலைகளை முன்புபோலே கூட்டவும் இதற்கு வாக்கியம் நித்தார் திஞ்ஞர் பாலர் நாடான் என்றறிவது—எ-று. (உக)

இதுவுமது:

(ருக) தேனுவானவீமேசனைத்தேடரி
தேறுபக்தொன்பதுபதினேழ்மூவைந்
தானபன்மூன்றுபெண்பதினொன்றுமெட்
டாறுமூன்றுதுலாமெட்டில்ரெண்டுதேள்
ளூனமில்லொன்றுமறன்னைந்துதள்கலை
யுமதேளாமெட்டொன்பதும்பத்துமே
வானவில்பத்துப்பன்னொன்றுமொன்றுமே
மருவுபன்னொன்றதாமேன்மகரமே.

(இ-ள்) தேனுவானவீமேசர்பொற்பாதந்தேடப்பட்ட சிங்கமாகிய ஆவணிக்குயோக்கியாதி கலை கூட்டும்படி-கசு-கஎ கரு-கஈ-இந்தக்கலைகளெல்லாஞ் சென்றநாளைக்குக் கணக்குப்பார்த்துக் கூட்டவும் இதற்குவாக்கியம் வைத்தசெல்வஞ் சுகமிதம் புரட்டாசிக்குக்கலை-கக-அ-கூ-இந்தக்கலைகளைக்கூட்டவும் இதற்கு வாக்கியம் வரங்கேட்போம்நூன்டோர் மின்னெயினி அற்பசிக்கு எட்டுநாளளவும் இரண்டு கலைகூட்டவும் இந்த யோக்கியாதி கலைகள் அற்பசி எட்டளவுங்கூட்டும்படி அந்தந்தமாதங்களில் எட்டுநாள்வட்டஞ் சொன்ன கலையும் அதற்குமேற்சென்றநாளைக்கூடின கலைகணக்குப்பார்த்துக் கூட்டவும் இந்தயோக்கியாதி கலை அறியும்படி இப்படி அற்பசி எட்டுக்குமேல்பங்குனிமாதமளவுங் கழிக்கும்வகை அற்பசி எட்டுக்குமேல்-கரு-அளவுங்கலை-க-கழிக்கவும் இதனுடன் நாள்-கரு-க்குமேல் உஉ-அளவும் கூ-கலை கழிக்கவும் இதனுடன்தினம் உஉ-க்குமேல் அற்பசிமீ வரைக்கும்-ரு-கலை கழிக்கவும்-இதற்கு வாக்கியம் காரோர் கற்றோர் மிகோர் பல்லோர் இனிகார்த்திகைக்கு யோக்கியாதிகலைகள்-கூ-அ-கூ-ம-இந்தக்கலைகளைச் சென்றநாளைக்குக்கூட்டிக்கழிக்கவும் இதற்குவாக்கியம்பூவோதேனைவைத்தோர்போகம் யினிமார்கழிக்கு-ம-கக கங-கக-கழிக்கவும் இதற்கு வாக்கியம் போதத்தவம்பலகலம்—எ-று. (உஉ)

இதுவுமது

(ருஉ) மேலதாம்வீமனாதனைப்போற்றியே
மிக்கவேபன்னொன்றொன்பதெட்டேழுமே
சாலிதொன்பதுநாலிரண்டாகுஞ்சுன்
றக்கமீன்ரொண்டுகாலேழுபத்துமே

சிலசங்கிரமநாழிகைசென்றது
திவியில்கூட்டக்கழியிராநின்றது
காலஞ்செல்கதமாதங்கதநினங்
கழிப்பதோரைநிலங்கழிபாகமே.

(இ-ள்) வீமனாதனைப்போற்றி அனி தைமாதத்துக்கு யோக்கியாதிகலை-கக-கூ-அ-இதற்கு வாக்கியம்தடங்கையோ வேலோன்வெற்போமாசிக்கு-ச-உ-க-இதற்கு வாக்கியம் வெவப்போ நீரோ மாதோகோவோ இந்தவாக்கியம் கூட்டவும் பங்குனிக்கு உ-ச-எ-ம-இதற்கு வாக்கியம் பாகோசிரோ பெண்ணேடொலம் இந்த யோகயாதி கலைகளை சித்திரைமீ முதல் ஆப்பசி எட்டளவுங் கழிக்கவும் அற்பசி எட்டுக்கு மேல் பங்குனி யளவும் பஞ்சாங்க கலையுடன் கூட்டவும் இது யோக்கியாதியென்றறியவும், இனி சங்கிரம சேஷமாவது அந்தந்தமீ பகலிலேபிறந்தால் பிறந்தநாழிகையை திக்குக்கலையோடே கூட்டவும் இராத்திரியிலே பிறந்தால் சென்றது போக நின்றநாழிகையைத் திக்குக்கூடினகலையிலேகழிக்கவும் கத்தினம் கதமாதத்திற்குகதமாதம் இராசியில் கழிக்கவும் கத்தினம் பாகத்தில்கழிக்கவும் யோக்கியாதி கலையிற் கழிக்கிறதானல் கழிக்கவும் கூட்டுகிறதானல் கூட்டவும்—எ-று, (உக)

இதுவுமது

(ருக)பாகமாயத்தைப்பஞ்சாங்கங்காண்பது
பத்துமன்றையில்வாக்கியத்துருவமு
மாகமொன்றுக்கித்தேசாந்தரகலை
யதனிற்கூட்டக்கழிப்பதானற்கழித்
தேகமாங்கார்த்திகைக்காலென்றிப்படி
யெடுத்துப்பாகங்களைக்கலையாக்கியே
போகமாமற்றைவாக்கியத்தாலெடு
புனிதர்வீமேசர்சந்திரபுத்தியே.

(இ-ள்) அற்றைப்பஞ்சாங்க மறியும்படி அன்றைய வாக்கியத்தை வைத்து வாக்கியத்துருவமுங்கூட்டிக் கலைபாக இராசியடைவே எறிட்டுத்தேசாந்தரகலை கூட்டுகிறதானல் கூட்டிக்கழிக்கிறதானல் கழித்துநின்றகலைபாக இராசியைக்கண்டு நட்சத்திரத்தைக் கழித்து இந்தப்பாகத்தைக் கலையாக்கி கீழே இருந்தகலையும் அத்துடன் கூட்டிவைத்து-இன்றையவாக்கியத்தைவைத்து நேற்றையவாக்கியத்தாலெடுத்துப்போடவும்மீந்தது புனிதராகிய வீமேசுரர் சந்திரபுத்தி—எ-று. (உச)

திதி அறியும்படி.

(௨௪) சந்திரபாகக்கலைமுக்கலைகளுஞ்
சந்திரன்புத்திக்கீய்ந்ததுநாழிகை
முந்துநாடோன்றநின்றபின்னுடனின்
முடிந்தநாழிகையாமினிப்பக்கமே
சந்தநாள்கலைபாகராசியுடன்
சங்கிரமம்யோக்கியாதிகூட்டலாற்கழி
யுந்துமேகதமாதங்கததின
மொழிக்கவீமேசுரர்திதியோங்குமே.

(இ-ள்) முன்னே நட்சத்திரத்துக்கு கண்டகலையையும்பாகத்தை யும் கலையாக்கினதையும் சந்திரபுத்திக்கீயவும் ஈந்து கண்டநாழிகைமு ன்னட்சத்திரம் தோன்ற நின்றநாழிகை பின்னட்சத்திரந்தோன்றுமென் றறிக,இனி திதியார்க்கும்படி முந்தினநட்சத்திரக்கலைபாக இராசியோ டே சங்கிரமசேஷம்பகலிலே பிறந்தால்பிறந்தநாழிகையைக் கலையோ டேகூட்டவும்இராத்திரிபிறந்தால் இராத்திரிசென்றநாழிகையைப்போ க்கிநின்றகலையில் கழிக்கவும் யோக்கியாதியுங் கூட்டுகிறதானால் கூட்டி க் கழிக்கிறதானால் கழித்துக்கததினங் கதமாதம் கழித்து நின்றகலைபா கஇராசியில் திதிதோன்றுமென்று வீமேசருரைத்தது—எ-று. (௨௫)

யோககரணங்கள் அறியும்படி.

(௫௫) ஓங்குசந்திரபுத்தியைப்பானுவா
லொழித்துமுன்றிதிதோன்றுங்கலைகளோ
டீங்குசந்திரபுத்தியிலீந்தவை
நின்றநாழிகைதோன்றுந்திதிகளே
வாங்குயோகந்திதிக்குக்கழித்தவை
வைக்கயோகம்வருங்கரணந்திதி
தாங்குமொன்றுக்கிருகரணம்பவங்
தக்கப்ரதமையிற்பாதிசங்கரா.

(இ-ள்) சந்திரபுத்தியில் சூரியபுத்தி எடுக்கும்வகை சித்திரைமீ முதல்பங்குனி மாதமளவும் எடுக்கும்வகை வாக்கியம்சேரும் செல்லு ம்வெல்லுமா மென்றும் வேலுங்கையுஞ்சொல்லூர்நல்லூர் மாம்பூபொ ற்பூவையும் இந்தப்படிக்கு மாதமாதந் திதிக்குச்சந்திரபுத்தியில் சூரிய புத்தி[illegible]க்கழித்து திதிக்குக் கண்டகலையைச் சந்திரபுத்திக்கீய்ந்து க ண்டநாழிகை முண்டநாழிகைமுன் திதி தோன்றப்பின் திதி தோன்று மென்றறிக இனியோகத்துக்குக் திதிக்குக்கூடினதெல்லாம் யோகத்து

க்குக்கழித்து போகத்திற்கண்ட கலைபாகத்தை இராசிகலையாக்கி முன் திதிக்குவாங்கின சூரியபுத்தியைக்கூட்டிக் கண்ட சந்திரபுத்திக்கீந்தநாழிகை முன்யோகந்தோன்ற பின்யோகந்தோன்றுமென்றறிக. இனி காணமறுமாறு, அமாவாசைகழித்தபிரதமை பிற்பாதியும் பவம் துதிகை முன்னையும், பாலவம் பின்னையும் கவுலவம் திரிதிகைமுன்னையும் தைதுலம் பின்னையுமகரசிசதுர்த்தி முன்னையும் வணசி பின்னையும்வயஷடி இப்படிஒரு திதிக்கு இரண்டுகரணமாய்-உ0-நாழிகையாய்வரும் இந்த ஏழுகரணமும் பஞ்சமிமுதல் அஷடமிமுன்னையும் அறும் அஷடமி பின்னையுமுதலாக ஏகாதசியிலறும் துவாதசிமுதல் பவுர்ணமி முன்னையும் அறும்பவுர்ணமி பின்னைமுதல் திரிதிகையில் அறும் சதுர்த்திமுதல் திரிதிகையில் அறும் சதுர்த்திமுதல் சப்தமிபாதியும் அறும் சப்தமி பிற்பாதிமுதல் தெசமியில் அறும் ஏகாதசிமுதல் சதுர்த்தசி முன்னையும் அறும் இந்த ஏழுகரணமும் ஒருதிதிக்கு இரண்டுகரணமாய் வரும் இனிசதுர்த்தசி பிற்பாதிமுதல்அமாவாசைகழித்த பிரதமை முற்பாதியளவுஞ் சகுனி சதுஷபாதம் நாகவம் கிமஸ்துக்கினம் இந்தநாலு கரணமும் இப்படிவரும் விமேசுரமூர்த்தியே—எ-று. (உ௬)

நட்சத்திரவிஷகடிகை.

(௱௬)சங்கரர்விமலர்தாள்சாருநா
டக்கமாவினுககன்பதிற்றியாச்சியங்
கங்தல்ரவிமுரசுமூவெட்டதாங்
கார்த்திதோன்றிமகமலேமுப்பது
மெங்கள்பாரவென்னேணந்துமும்மீன்முற
மிலங்குசோதியொளியுமீரேழதாங்
துங்கவாதிரைமூவேழுமாடிதை
தூர்க்கையாடையுமூலநாலேந்ததே.

(இ-ள்) சங்காரகிபவிமேசர் தாளைத்தொழு தெழுகின்ற நட்சத்திரத் தியாச்சியமறியும்படி அசுவினிக்கு-௫0-பரணிபூராடம் உத்திரட்டாதிக்கு-உ௪-கார்த்திகை இரேவதி மகம் புனர்பூசத்திற்கு-௩0-உரோகணிக்கு-௪0-மிருகசீரிஷம்-சோதி விசாகம் கேட்டைக்கு ௧௪-திருவாதிரைக்கு-உ௧-உத்திராடம்-பூசம் பூரம்-சித்திரை மூலத்திற்கு-உ௧-க்கு மேல் தியாச்சியம்—எ-று. (உஎ)

இதுவுமது

(௱எ)அந்தவோணமவிட்டமனுடமு
மையிரண்டிருபத்திரண்டத்தமு

முந்தசெக்குமூவாறுபுரட்டைடயே
ரூதியன்றுறுநாலெட்டாவமே
வந்தநாழிகைநாலுறும்வாச்சியம்
லைக்கலாஸ்டுகயவர்த்தனையறிந்
துந்துமந்நாள்விடகடிநாடியி
லுற்றவர்த்தனையோர்ந்துபெருக்கமே,

(இ-ள்) திருவோணம் அவிட்டம் அனுஷத்திற்கு-௰ அஸ்தத்திற்கு-௨௨ உத்திரஞ்-சதயத்திற்கு-௰௮-பூரட்டாதிக்கு-௧௯-ஆயில்லியத்திற்கு-௧௨-க்குமேல்-அந்தந்த நட்சத்திரங்களுக்குச்சொன்ன நாழிகையில் விஷகடிகை வந்து மூன்றே முக்கால்நாழிகை நிற்குமென்றறிக க்ஷயவர்த்தனை அறியும்படி நேற்றைய நட்சத்திரத்தில்க்ஷயமென்றறிக, க்ஷயவர்த்தனைகண்டநாழிகையை இத்தனையென்றறிந்து அந்தந்தநாழிகையைமுன் நட்சத்திரங்களுக்குச்சொன்னநாழிகையிற்பெருக்குவது. ()

இதுவுமது.

(௫௮)பெருக்கிக்கண்டவிநாடியைநாடியாய்ப்
பேணிவர்த்தனையாவிடிற்கூட்டுமே
கருத்திறுற்சயமாகிற்கழித்திடக்
கண்டநாடியதுபதுமேற்படி
லொருக்கியோர்தினமேற்படுநாழிகை
யுற்றிடும்விடமென்றேயுணர்ந்துநல்
லருக்கடற்றெடுக்காட்டைப்போற்றியே
யாய்ந்துபஞ்சாங்கமன்பாலுணருமே.

(இ-ள்) முன் தியாச்சியத்துக்கு வருநாழிகை வர்த்தனையாகில் கூட்டுவதுக்ஷயமாகில் கழிப்பதென்றறிக தியாச்சியம் முன்னாளேபோகாமல் நாழிகை-௬௰-க்குமேல் வரில் நாழிகை- ,, ௰-கொண்டது ஒருவாரமாகப்பெருக்கிமற்றநாள் சென்றநாழிகையில்தியாச்சியம்வரும்-எ-று.

இராசிவிஷகடிகை வாரவிஷகடிகை.

(௫௯)உணருமேடமெருதுவிற்கன்னிபாம்
புன்னுமாதியாழ்கூனரிகோலதா
மணுகுமேகழுமான்கயற்றேளரி
யல்டும்பன்றிகடையனைநாழிகை
புணருஞாயிறுநாலெட்டுச்சோமனே
பூணுமாறேழுபொன்னரிமுப்பதொன்

றினையுமாறுற்பத்தொன்றேழிரண்டுசெ
ணிருபத்தொன்றுவிடகடியெந்தையே

(இ-ள்) இராசி விஷகடிகைஅறியும்படி மேஷம் ரிஷபம் தனுசு கன்னிஇந்த-௪-இராசியும்-ஆதியில்-௫-நாழிகை பாம்புன்னும்-மிதுனம் கும்பம் சிங்கம் துலாம்இந்த-௪-இராசியும் நடுவில்-௫-நாழிகை கழுகுன்னும் மகரம்மீனம்விருச்சிகம் கர்க்கடகம் இந்த-௪-இராசியும் அந்தியத்தில்-௫-நாழிகை பன்றியுன்னும் இவைசுபகாரியங்களுக்கு விலக்கப்படும், இனி வாரங்களுக்கு விஷகடிகையறியும்படி ஞாயிற்றுக்கு-௩௨-திங்களுக்கு-௪௨-செவ்வாய்க்கு-௨௧-புதனுக்கு-௪௧-சனிக்கு-௧௪-வெள்ளிக்கு-௨௧-வியாழத்துக்கு-௩௧- இந்தப்படி அந்தந்த வாரங்களுக்குச் சொன்ன நாழிகைக்குமேல் விஷகடிகை ஒருநாழிகையிருக்கும் இது சுபகாரியங்களுக்கு விலக்கப்படும்—எ-று. (௨௯)

திதிவிஷகடிகை.

(௩௰) எந்தைபூத்திதிப்ரதமையெனமூன்றுமே
விலங்குமேதுதிகைக்குமீராறுமே
லந்தமாமன்பத்தஞ்சாந்திரிதிகை
யைந்துசட்டிசதுர்த்திக்குமாகுமே
முந்துபஞ்சமிமூவைந்துமேலதா
மூற்றுமட்டமிசத்தமிபத்தின்மே
லுந்துமேநவமிக்கிருபத்திரண்
டொக்குமேதசமிக்கேழ்கடிகையே.

(இ-ள்) சந்திரமாதமாவதுமுன் உவாகழித்தபிரதமைமுதல் அமாவாசை யீறாக முப்பது திதியஞ் சந்திரமாதம், இந்தத் திதிகளுக்கு விஷகடிகை பிரதமை-௨௪-துதிகைக்கு-௰௨-திரிகைக்கு-௫-சஷ்டி சதுர்த்திகட்கு-௫-பஞ்சமிக்கு-௰௫-அஷ்டமி சப்தமிகட்கு-௪-நவமிக்கு ௨௨-தசமிக்கு-௭-நாழிகைக்குமேல் ஒரு நாழிகைவிஷகடிகை—எ-று.

இதுவுமது.

(௩௧) கடிகைநாலேழுமொன்றுமேகாதசி
கனதுவாதசிபூரணையாறுமென்
மூடியுமேதிரயோதசிமுப்பது
மொழியுமேசதுர்த்தேசியைப்பத்தினன்
றடியதாமமாகைமுப்பத்திரன்
டதனின்மேற்றிதிக்குமோர்நாழிகை

விடமதாமற்றநாடியமிர்தமாம்
வீமர்கோன்றிருமேனியுணருமே.

(இ-ள்) ஏகாதசிக்கு-உ௯-துவாதசி-பவுர்ணமிகட்கு-௬- திரயோத சிக்கு-௩௰ சதுர்த்தசிக்கு-௫௧-அமவாசைக்கு-௧உ-நாழிகைக்குமே ல் ஒருநாழிகை விஷகடிகை நிற்கும், இவைசுபகாரியங்களுக்கு விலக் கப்படும், இனி அமிர்தகடிகை சொல்லுவோம்—எ-று. (௩௨)

நக்ஷத்திர அமிர்தகடிகை சொல்லுவோம்.

(௩௨)உணருமூன்றனமிர்தமூவேழிக்மே
லுன்னடிப்புறும்மீன்பூரமுப்பது
மணையுமாரலேயம்பத்தனாநாகமு
மமிர்தநாற்பதுசேர்மூன்றில்புட்பனோ
யிணையுமூலமுடியுமீரேழின்மே
லிலங்குநூசம்பாயபதினாறுமேற்
றுணைமகம்முறஞ்சுண்டிலறியுமே
சொல்லுநாலேந்துவீமேசர்தோற்றமே

(இ-ள்,) நக்ஷத்திரஅமிர்தகடிகை அறியும்படி அசுவினி-உ௧-க்கு மேல்பரணி மிருகசிரிஷம் பூரங்களுக்கு-௩௰-க்குமேல்கார்த்திகைக்கு ௫௰-க்குமேல்திருவாதிரை ஆயிலியங்களுக்கு-௪௰-க்குமேல்உரோகணி புனர்பூசம் அவிட்டம்அனுஷம்மூலம் உத்திராடங்களுக்கு-௧௪-க்குமே ல்பூசம் சித்திரைகட்கு-௧௬-க்குமேல்மகம் விசாகம்சதயம் திருவோண ங்களுக்கு-உ௰-க்குமேல்-௪-நாழிகை அமிர்தகடிகை—எ-று. (௩௩)

இதுவுமது

(௩௩) தோற்றமுத்திரமுப்பத்துமூன்றினிற்
றிலங்குமத்தமேற்கேட்டைமுப்பத்தொன்றே
யாற்றல்சோதியிருபத்திரண்டுபூ
ராடநாழியொருபத்தின்மேலதாம்
போற்றும்வெந்ததிரொன்பதிரேவதி
பொருந்துமீராறமிர்தநாழிகை
யேற்றமேல்வினையாடும்வீமேசுர
ரெக்கைநோக்கமமிர்தகடிகையே

(இ-ள்,) உத்திரத்திற்கு-௩௩-க்குமேல், அஸ்வத்திற்கு-எ-க்குமே ல்கேட்டைக்கு-௩௧-க்குமேல்சுவாதிக்கு-உஉ-க்குமேல், பூராடத்திற்கு ௰-க்குமேல், உத்திரட்டாதிக்கு-௧௯-க்குமேல், இரேவதிக்கு-௧உ-க்கு மேல்-௪-நாழிகை அமிர்தகடிகை—எ-று, (௩௪)

வருடப்பிறப்பு.

(௩௪)நோக்கமுன்னூண்டிலாடியீரெட்டின்மே
ளெய்யபக்கமீராறுபன்னொன்றுநா
டாக்கும்வாரமிரண்டிற்சித்திரைமுதற்
சந்திரன்மறைவேதமகாருடி
யாக்குமீசர்கண்கந்தன்வெளிபணி
யணியுகங்கள்பஞ்சாக்கரப்பம்றுமாய்
தேக்குமாண்டாண்டநந்தயுகங்களுஞ்
செருக்குவீமேசர்பாதமீன்கன்னியே.

(இ-ள்.) ஆண்டாண்டுதோறும் வருஷம் பிறந்தநாள் முதல்வரும் வருஷப்பிறப்பறியும்படி, பிரபவவருஷம் பிறந்தநாழிகைக்குவரும்வருஷம்பிறக்கிறது, ௰௩ ௰நாழிகை,வருஷந்தோறுங்காண்பதுதிதி-௰௨-ம், திதிநட்சத்திரம்-௧௧ - ஆம்நட்சத்திரம், மாதப்பிறப்பென்றறிக, ௭-ஆம் வாரம் ஆனிமாதப்பிறப்பென்றறிக, ௪-ஆம்வாரம்ஆடிமாதப்பிறப்பென்றறிக, ௭-ஆம்வாரம் ஆவணிமாதப் பிறப்பென்றறிக, ௩-ஆம்வாரம் புரட்டாசிமாதப்பிறப்பென்றறிக, ௯-ஆம் வாரம் அற்பசிமாதப்பிறப்பென்றறிக, சித்திரைமாதம் பிறந்தவாரமே கார்த்திகைமாதப்பிறப்பு, ௨-ஆம் வாரமேமார்கழிமாதப்பிறப்பு, ௪-ஆம்வாரமேதைமாதப்பிறப்பு,௫-ஆம் வாரமே மாசிமாதப்பிறப்பு, ௭-ஆம்வாரமேபங்குனிமாதப்பிறப்பு,௨-ஆம்வாரமே சித்திரைமாதப்பிறப்பு இப்படி ஆண்டாண்டு தோறும் அனந்தயுகங்களுங் காண்பது—எ-று. (௧௫)

இராஜாதிபதிமந்திரி சேனாதிபதி மேகாதிபதிதானியத்திற்கதிபன்
இராஜாதிபதி நிரஜாதிபதி மேகாதிபதி அர்க்காதிபதி
அறியும்படி.

(௩௫.)மீனபூர்வபிரதமரசனு
மேடமாதமுதல்வாரமந்திரி
சேனையாதிபஞ்சிங்கங்கடகமே
செழித்தபைங்கூழ்சிலைதானியாதிப
னூனமில்லாத்துலையேரசாதிப
னுற்றபாடாணமோங்குமகாமே
யானதானியம்போக்குமியாழ்சூரிய
னுதிரைப்பூணிமாறிகலக்குமே.

(இ-ள்.) பங்குனிமாதத் தமாவாசைகழித்த பிரதமைநாள் வந்தவாரம் அவ்வாண்டுக்குஇராஜாதிபதியென்றறிக, சித்திரைமாதப் பிறப்புவ

ந்தவாரம் மந்திரி, ஆவணிமாதப்பிறப்பில் வந்தவாரம் சேனாதிபதி ஆடிமாதப்பிறப்பில் வந்தவாரம் பயிரை வளர்ப்பவன் மார்கழிமாதப்பிறப்பில்வந்தவாரம் தானியத்துக்கதிபன், அற்பசிமாதப்பிறப்பில் வந்தவாரம் இராஜாதிபதியாவன், தைமாதப்பிறப்பில் வந்தவாரம்பாஷாண முதலானவைகளை வளர்க்கப்பட்டசிரசாதிபதி, ஆனிமாசப் பிறப்பில் வந்தவாரம் தானியத்தைச் செலவழிக்கப்பட்ட அர்க்காதிபதி, இரவி திருவாதிரைக்குப்போகிறவாரம் மேகாதிபதி—எ-று (௧௬)

மேகவிகற்பம்.

(௧௬) கலிசகாத்தான்றைடைபெட்டாற்பெருக்கியே
கழிப்பதொன்பதிலொன்றிலாவர்த்த
மிலகும்புன்மழையேசங்கவர்த்தமு
மெய்துங்காற்றுப்பிரளயம்புட்களந்
துலைதுரோணவெள்ளங்காளமேகமே
துளிவளிநீலன்வஞ்சகத்தோயனு
மலையினுநெல்விளையும்வருணனே
வாயுக்கிதுதமேமவெகுமாரியே.

(இ-ள்) மேகாதிபதி பார்க்குமடைவுஅவ்வாண்டுக்குக் கலிசகார்த்த வருஷத்தை-அ-ற்பெருக்கி ௯-ற்கழிக்க-௧-மீந்தால் வர்த்தமேகம் புன்மழைபெய்யும், ௨-மீந்தால்சங்குவர்த்தமேகம் காற்றடிக்கும்; ௩-மீந்தால் புஷ்களமேகம் பிரளயமாய் வருஷம வருஷிக்கும், ௪- மீந்தால் துரோணமேகம் - வெகுவெள்ளமாக வருஷிக்கும், ௫ - மீந்தால்காளமேகம் தூறலுந்துளியுமாய்க்காற்றுமிகுதியாயடிக்கும், ௬-மீந்தால்நீலமேகம் கண்டாவருஷம், ௭-மீந்தால் வருணாமேகம்வெகுவருஷம்வருஷிக்கும் மலையிலும் நெல்விளையும் நற்காலமாம், அ-மீந்தால் வாயுமேகம் அவ்வாண்டு பஞ்சமாகும், ௯- மீநதால் தமோமேகம் வெகு மாரிபொழிந்து நற்காலமாம்—எ-று (௧௭)

மாரியளவு.

(௧௭) மாரனைக்கடிந்தோன்விழிமைந்தரு
மன்னாகிற்குறுணிசெவ்வாய்பதக்
கார்புதன்மதிக்கேமுக்குறுணிநீர்
கனகர்தூணியகலநீளஞ்சத
நூரயோசனைபூமியினன்குபாற்
றூய்யபர்வதக்கானகத்தாறுபால்
வாரியெங்கும்பொழியுமீரைந்துபால்
வள்ளல்சென்னிக்கதிர்கங்கைமன்னுமே

(இ-ள்.) இரவிசநி இவர்கள் இராசாவாகில் அவ்வாண்டுக்குமழை குறுணி, அங்காரகனாகில்பதக்கு, புதன்திங்களாகில் முக்குறுணி. வெள்ளி வியாழம் தூணி, இந்தமரக்கால் நூறுயோசனை தூரம் அகலமும் நிகளமுமுள்ளமரக்கால் அந்தந்த வருஷங்களுக்குக்கண்டமழையில்- ௪-பங்கு பூமியிற் பொழியும்-௩-பங்குமலையிலுங் காட்டிலும் பொழியும், ௰-பங்கு சமுத்திரத்திற்பொழியும்—எ-று. (௩௮)

மாரி தோற்றமும் வரவும்.

(௩௯) தூர்த்திற்சோதிதொடர்ந்தொருசத்தியா
யார்த்துநாதமணைந்தொருவிந்துவாய்
பார்ச்சதாசிவம்பார்முதலைந்துக்கு
மார்த்திற்சத்தியோடாரமிர்தாகுமே.

(இ-ள்.) மாரிதோற்றமும் மழைவரவும் அறியும்படி நிராதார வஸ்துவான பெருவெளியிலே அறிவென்னும் நிராதாரப்பராசத்தி தோன்றிபராசத்தியிலே நாதந்தோன்றி நாதத்திலே பரவிந்துதோன்றி பரவிந்துவில் சத்திமுதலான பஞ்சமூர்த்திகளும் பஞ்சபூதமுந் தோன்றும் பரவிந்தாவது அண்டத்துக்கு மன மென்றும் மதியென்றும்பேர் அமிர்தமதி யென்னுஞ் சந்திரனிலே வாயுபிறக்கும் வாயுவினிட கடினத்திலே அக்கினிதோன்றும் அக்கினி-என்னப்பட்டமின்னிலே நவமேகங்களும்பிறந்துஅவை இடமாக வருஷித்து அந்தநீர்க்குழம்பிலே சிக்கென்று பிருதிவு என்னப்பட்ட பூமிதோன்றும் இப்படி அண்டத்திலுள்ளது. பிண்டத்துக்குமாம் பிரம்ம ரந்தரத்திலேகங்கையென்றும் அமுத கங்கையாயிருந்து தேகத்தைவளர்க்கும் இப்படி அண்ட வெளியே அடி முடிநடுவு மாயிருக்கப்பட்ட வஸ்துவின்மனக்கண்ணாய் கங்காதேவியுமாய் அண்டத்திலுண்டான சீவாத்மாக்களைப் பரவிந்து வளர்க்கும்—எ-று. (௩௯)

ஆதாயம் அறியும்படி.

(௪௰) இரவியாறுகதிரிந்திரண்டுசே
யெட்டுபன்னேழுபுந்திபத்தொன்றுமே
குருவுமூவேழ்புகர்சநிபத்ததாங்
குலவுமவ்வாண்டரசன்கதிருட
னரியராசியதிபன்கதிருமொன்
றுக்கிமூன்றும்பெருக்கித்தொகையுடன்
மருவுமோரைந்துகூட்டிமூவைந்துக்கீ
மற்றிருந்ததாதாயமாய்பார்ப்பதே,

